உ
சிவமயம்

# தருக்கசங்கிரகம்

**தருக்கசங்கிரகதீபிகை என்னும் உரையுடன்**



**திருவாவடுதுறை ஆதீனம்**

**1983**

உ
சிவமயம்

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துத்
திராவிடமாபாடிய கர்த்தராகிய

# ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்

## 199-வது குருபூஜை விழா மலர்

உருத்ரோத்காரி - சித்திரை - ஆயில்யம்

21 - 4 - 1983

உ
சிவமயம்

# தருக்கசங்கிரகம்

**தருக்கசங்கிரகதீபிகை என்னும் உரையுடன்**



மொழிபெயர்ப்பாசிரியர்:
**திராவிடமாபாடியகர்த்தர்**
**ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள்**

**திருவாவடுதுறை ஆதீனம்**
**1983**

உ
சிவமயம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
        போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
        மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
        குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
        நீடூழி தழைக மாதோ.

- ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முன்னுரை

அறிவைப்பற்றிய ஆழ்ந்த ஆராய்ச்சியே **தர்க்கம்** எனப் பெறும். இதனை மனத்தின் மருந்தென்றும் விஞ்ஞானங்களுக்கு வீஞ்ஞானமென்றும் அறிவின் விளக்கமென்றும் பலவகையில் அறிஞர் பாராட்டுவர். *தர்க்கம்:* பொருள்களை முடிவு செய்வதற்கு இன்றியமையாத கருவியாமென நம் முன்னோர் நெடுங் காலத்திற்கே முன்பே கண்டனர். வைதிக நூல்களாகிய **மீமாம்சை**, **நியாயம்**, **வைசேடிகம்**, **சாங்கியம்**, **யோகம்**, **வேதாந்தம்** என்னும் ஆறனுள் நியாயமும் வைசேடிகமும் தர்க்கமென்னும் பொதுப்பெயரால் வழங்கப்பெறும்; இவை முறையே **கௌதமர்**, **கணாதர்** என்னும் முனிவர்களால் செய்யப் பெற்றன, நியாயநூல் ஐந்து பிரிவுகளை யுடையது. இதிலுள்ள நூற்பாக்கள் ஐந்நூற்று முப்பத்தொன்பது, வைசேடிகநூல் பத்து பிரிவுகளையுடையது. இதிலுள்ள நூற்பாக்கள் 373.

**பொருள் :**

இனி நியாயசாத்திரம் பதினாறு பொருள்களையும் வைசேடிக சாத்திரம் ஏழு பொருள்களையும் நிரூபணம் செய்யும். நியாய நூலில் கூறப்படும் பிரமாண முதலிய பொருள்களாவன: - பிரமாணம், பிரமேயம், ஐயம், பிரயோசனம், திருட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தர்க்கம், நிர்ணயம், வாதம், ஜல்பம், விதண்டை, எத்துவா பாசம், சலம், சாதி, நிக்ரகத்தானம் என்பன (16). வைசேடிக நூலில் கூறப்பெறும் பொருள்களாவன: - திரவியம், குணம், தொழில், சாதி, விசேடம், சமவாயம், இன்மை என ஏழுவகைப்படும். இவற்றின் இலக்கணம் இந்நூலுள் கூறப்பெற்றள்ளது.

மேலே எறிந்த கல் கீழேவிழும் என்பதும்; காந்தம் வடதிசைநோக்கி நீற்குமென்பதும், நிலம் உருண்டை வடிவினது என்பதும்; இருள் ஊற்றுணர்ச்சியின்றி உருவமுடையதென்றும்; மக்கள் மனவுணர்வுடையர் என்பதும் இயல்பாகவே அமை வன. ஆயினும். அவற்றைச் சிறப்புவகையால் நூல் வாயிலாக வெளிப்படுத்துவது போல, பொருள்களின் இலக்கணமும் பிரமாணமும் இயல்பாகவே அமைவன, ஆயினும் அவற்றைச் சிறப்புவகையால் கௌதமரும் கணாதரும் நூல் வாயிலாக வெளிப்படுத்தினர்.

**அளவை:**

இனி, தருக்கம், நியாயம், அளவை, ஏரணம், எண், என்பன ஒருபொருட்கிளவி. தருக்கநூல் உணர்ச்சி (சொல்) இலக்கண நூல் உணர்ச்சி இல்லாதாருக்கு அமையாது.

"*ஆற்றின் அளவறிந்து கற்க அவையஞ்சா*
*மாற்றம் கொடுத்தற் பொருட்டு*" - குறள் 725.

என்னும் திருக்குறளுக்கு உரை வரைந்த பரிமேலகியார் “சொல்லிலக்கண நெறியானே அளவை நூலை யமைச்சர் உட்பட்டுக்கற்க” எனக்கூறி அளவைநூல் சொல்நூல் கற்றே கற்க வேண்டுதலின் அதற்கு அஃது ஆறெனப்பட்டது. அளக்குங் கருவியை அளவு என்ருர். “ஆகுபெயரான், என விளக்கமும் கூறியமை காண்க. “ஏரணம் காணென்பர் எண்ணர்” எனத் திருச்சிற்றம்பலக் கோவையைப்பற்றி அபியத்தர் கூறிய செய்யுளில் ஏரணம், எண் என்பன அளவை நூலைக் குறிக்குமெனக் குறிப்பிடுவர். “எண்ணெழுத் திகழேல்” “எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்” என, ஔவையாரும், “எண்ணென்ப ஏனை யெழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழும் உயிர்க்கு” என வள்ளுவருங்கூ றுவர். இங்கு ‘எண்’ என்பது தருக்கநூலைக் குறிக்கும்.

மேல்பலப் பேரறிஞர்களுள் அரிஸ்டாட்டில் முதலியோர் கூறும் தருக்கமும் இந்தியநாட்டுப் பேரறிஞர்கள் கூறும் தருக்கமும் பெரிதும் வேறுபாடுடையன. அவற்றின் அமைப்பு முறையும் ஆட்சிமுறையும் அடிப்படையிலிருந்தே மாறுபாடு டையன. இந்தியநாட்டில் தருக்க நூல்கள் பல்வேறு காலங்களில் வளர்ந்துள்ளன. வட.நாட்டில் கி.பி. 1098-1150-ல் கங்கேசர் இயற்றிய **“தத்துவ சிந்தாமணி”** என்னும் நூலே மிகச் இறந்த நூலாக விளங்குகிறது.

**தமிழில் அளவை நூல்கள்:**

தமிழ்நாட்டில் காஞ்சீபுரம் தருக்கநூற் பயிற்சிக்குச் சிறந்தவிடமாக ஒருகாலம் விளங்யெது. சங்ககாலப் புலவருள் ஒருவரான மதுரைக் கூலவாணிகன் சாத்தனுர். தாமியற்றிப் மணிமேகலையில் அதன் இறுதிப் பகுதியில் தருக்கநூல் கருத்துக்களைச் செந்தமிழில் இறம்பெற விளக்கியுள்ளார். சந்தான குரவருள் நான்காமவர் உமாபதி சிவனுர். அவர் இயற்றிய சிவப்பிரகாசம் என்னும் நூலில் “புகலளவைக்கு அளவாகி” என்று குறிப்பிடுவர். இரண்டாமவராக விளங்கெவர் அருணந்தி சிவாசாரியார், அவர் இயற்றிய சைவசமய சாத்திரம் சிவஞானசித்தியார்.

**சிவஞான சித்தியார்:**

இது பரபக்கம் சுபக்கம் என்னும் இரு பகுதிகளையுடையது. அவற்றுள் சுபக்கம் என்னும் பகுதியின் தொடக்கத்தில் பதினுன்கு செய்யுள்களால் “அளவையியல்” எனும் ஓரியல் அமைந்துள்ளது. சிவஞான சித்தியாருக்குப் பலவுரைகள் இருப்பினும் இப்பகுதிமட்டும் இன்றுவரை பெரிதும் தெளிவில்லாத பகுதியாகயிருந்து வருகிறது. சிவஞான சித்தியாரைப் பாடமாக நடத்துபவரும் இதனை விடுத்து மேற் செல்வதை பழக்கமாகக் கொள்கின்றனர். பயில்வார் மாணுக்கர், அப்பகுதிகளை நூலிலிருந்து அப்புறப்படுத்துகின்றனர். இந்நிலை வருந்தத்தக்கது. இதற்கு ஓர் பரிகாரம் (வழி) இன்றளவும் செய்யப்பெறவில்லை, இதனை ஓரளவேனும் தெளிவுபடுத்தல் இன்றிய மையாத ஒன்றுகும். தமிழில் கருவி நூல்களைப் பயில்பவர் மெய்யுணர்வுத்துறை யில் பயில்பவர் பலராவர்.

தமிழில் அளவைக் கருத்துக்களை விளக்கியமைந்த கலிப் பாடல்கள் தமிழ் நூல் உரைகளில் காணப்பெறுகின்றன என்பர் டாக்டர் உ, வெ. சாமிநாத ஐயர் (தமிழ் அன்றும் இன்றும்) நூலாதிரியருள் தொல்காப்பியனர் "எடுத்த மொழியினஞ் செப்பலுமுரித்தே" என்றதனல் அருத்தாபத்து (பொருட்பேறு) அளவையையும் இயற்கைப் பொருளையிற்றெனக் ளெத்தல் என்றதனுல் **'சம்பவ'** அளவையையும் பிறவற்றையும் குறிப்பிட்டுள்ளார். திருவள்ளுவர் முதல் செய்யுளிலேயே உவமை யளவைக் குறித்துள்ளார். உரையாசிரியர்களுள்; சேனுவரையர் பரிமேலழகர் போன்ரேர் அளவைக் குறிப்புக்களை மிகுதியும் விளக்கியுள்ளனர். சிறப்பாகச் சேனுவ ரையர் தம் உரையையே அளவைநூல் முறைப்படி அமைத்துள்ளார், பரிமேலழகி யார் அளவைகளாவன: - பொறிகளாற் காணுங் காட்சியும், குறிகளான் உய்த்துணரும் அனுமானமும், கருத்தாமொழியாகிய ஆகமமும் என மூன்று ஒப்புப் பற்றியுணரும் அருத்தாபத்தியும், உண்மைக்கு மாறுய இன்மையும் என இவற்றைக கூட்டி ஆறு என்பாரும் உளர். இவையும் ஒருவாற்றுன் அவற்றுள் அடங்குதலின், மூன்று என்பர் எனவே பொருள்; அளவைகள் பற்றிய நூல்களையும் அவற்றின் வழிநூல்களையும் ஆதாரமாகக் கொண்டு அன்னம்பட்டர் என்பார் 17-ஆம் நூற்றாண்டில் தருக்க சங்கிரக மென்னும் நூலையும் அதனுரையாகத் தருக்க சங்கிரக தீபிகையென்னும் அன்னம் பட்டீயம் என்னும் உரையினையும் எல்லோரும் எளிதின் உணர்தற்பொருட்டு இயற்றி யருளினர். தீபிகை - விளக்கம்.

பின்னர் தருக்க சங்கிரக தீபிகைக்கு பலவுரைகள் எழுந்தன. அவை அனுமதி யம், நீலகண்டீயம். முகுந்தபட்டீயம் முதலிய பலவாகும். இவை உரைக்கு உரையா கும். பின்னர் தருக்க சங்கத்திற்கு நியாயபோதினி, பதகிருத்தியம் முதலிய உரைநூல்கள் எழுந்தன. இவை யாவும் வடமொழியில் உள்ளவை, **தருக்க சங்கிரகம்**, **தருக்க சங்கரகதீபிகை** என்னுமிரண்டையும் தமிழில் மொழிபெயர்த்தரு ளியவர்கள் திருவாவடுதுறை ஆதனத்துத் **திராவிடமாபாடிய கர்த்தராகிய ஸ்ரீமாதவச் சிவஞான சுவாமிகள்** ஆவார்கள். இவ்வாதீனத்தில் இப்பொழுது இருபத்து மூன்றுவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளிச் சிவஞானச் செங்கோல் செலுத்தும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவுளப் பாங்கின் வண்ணம் இந்நூல் ஸ்ரீ சிவஞானசுவாமிகளது 199-ஆம் ஆண்டுக்குருபூசை விழா மலராக மலர்கின்றது.

இப்பதிப்பில் தருக்கநூல் பற்றிய குறிப்புகளும் மொழி பெயர்ப்பாசிரியர் வரலாறும் நூலும் உரையும் அருஞ்சொற் பொருளும் சோதன அநுபந்தமும் சேர்க்கப்பட்டுள்ளன.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் சிவஞான சுவாமிகள் அவதரித்த விக்கிரமசிங்கபுரத்தில் தோன்றிய பெருமை யுடையவர்கள், தமிழ் இலக்கிய இலக்க ணங்களிலும் சைவசித்தாந்த நூல்களிலும் நல்ல பயிற்சிபெற்றவர்கள். திருமுறை, ஞானசாத்திர நூல்களின் அருங்கருத்துகளை யாவரும் எளிதின் உணர்ந்து நல்வாழ்வு பெற்றின்புற வேண்டும் என்ற அருள் உள்ளம் வாய்ந்து விளங்குபவர்கள். ஆதீனச்

சம்பிரதாயங்கள் முறையாகக் காக்கப்படவேண்டும் என்பதில் ஆழ்ந்த கருத்துடைய இவர்களது அருளாட்சியில் ஆதீனப் பணிகள் சிறந்தோங்குதல் ஒருதலை,

அடியேனை இச்செயலில் பணிகொண்டு அருள் வழங்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் திருவடி மலர்களை என்றும் வழுத்துகின்றேன்.

திருவாவடுதுறை,
10-4-83.

இங்ஙனம்,
சித்தாந்தப் பேராசிரியர்,
**மு. சுந்தரேசம் பிள்ளை,**
ஆதீன வித்துவான்
திருவாவடுதுறை ஆதீனம்.

**மொழிபெயர்ப்பாசிரியர் வரலாறு:**

# ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள்

ஆசிரியரது பிள்ளைத் திருநாமம் முக்களாலிங்கர் இவரது தீட்சாநாமம் சிவஞானமுனிவர் தவத்தான் மிக்கோருடைய சூழலில் தலைமை பூண்டொழுகி வந்தமையின் இவர் யாவரானும் மாதவச் சிவஞானமுனிவர் எனக்கொண்டாடப் பெற்றார். சிவஞானிகட்கு உரியதாகிய இலக்கணங்கள் எவற்றினும் குறைவற நிறைந்து இவர் ஞானயோகியாகவே விளங்கினமையான் இயல்பாகப்பெற்ற தீட்சாநாமமே காரணத் திருநாமமாகவும் சிறந்ததாகலின், இவர்களை ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் எனச் சந்நிதானங்களும், தம்பிரான் கூட்டத்தினரும் வழங்கி வந்தனர். ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனார் அருளிச்செய்த சிவஞானபோதத்துக்குத் தமிழில் பேருரைகண்ட பெரியார் இவராகலின், திராவிட மாபாடியகாரர் என அறிவுடையுலகம் இவரை அழைப்பதாயிற்று. ஆதினத்தில் உள்ள அனைவரும் ‘ஆதன குலதெய்வம்’ என இவரைப் பாராட்டினர்.

இவர் பண்டை ஈற்றவத்தால் தோன் றிப்பரமனைப்பத்தி பண்ணும் நல்ல குடியிலே அவதரித்துத் திருவாவடுதுறை ஆதீனத்தில் மிக இளமைப் பருவத்திலே வந்தடுத்துத் தீட்சை முதலியயாவும் பெற்றுச் சிறந்தனர். அகத்தயமுனிவர் வரத்தால் இவர் தோன்றியவராதலின், மிக எளிதாக வட மொழிக்கடலும், தென் தமிழ்க்கடலும் நிலைகண்டு உணர்ந்தனர். தந்தையார் ஆனந்தக்கூத்தர். தாயார் மயிலம்மையார். இவருக்கு ஒரு சகோதரர் உண்டு. சிறியதந்தையார் நமச்சிவாயக் கவிராயராவர். அவர் சிங்கைப் பிரபந்தங்கள் பலவற்றைச் செய்து புகழ் பெற்றுர். ஏழு தலைமுறைகளில் தெய்விகப் பெரும் புலமையுடையதாக இவர் குடும்பம் விளங்கியது. இவர்கள் சந்ததியார் இன்றும் நல்ல கல்வியறிவு உள்ளவர்களாகவே விளங்கி வருகின்றனர்.

ஸ்ரீ மாதவச் சிவஞான யோதிகளுடைய ஞானசாரியர் பேரூர் - வேலப்ப தேக மூர்த்திகள். இவர்கள் பத்தாம் பட்டத்து வேலப்ப தேக மூர்த்திகள் காலத்தில் சின்னப் பட்டத்தில் இருந்தபடியே பேரூரில் சிவபரிபூரணம் பெற்றனர். (பேரூர் - வேலப்பதேரசிகர் அருளிய நூல் ‘பஞ்சாக்கரப் பஃறொடை’ என்பது, அந்நூல் பண்டார சாத்திரம் பதினுன்கனுள் ஒன்றும்.) பேரூர் - வேலப்ப தேசிகருக்குப் பின்னர் மற்றெரு வேலப்பத் தம்பிரானைச் சின்னப் பட்டத்தில் இருத்தினுர்கள், இவர்களே 11- ஆவது பட்டம் வேலப்ப தேசிக மூர்த்திகள். இவர்கள் திருப்பெருந்துறையில் சிவபரிபூரணம் அடைந்தனர்.

இனி, திராவிட மாபாடியகாரராகிய இந்நூலாசிரியர் மாணுக்கர்களில் இலக்கணம் - சிதம்பரநாதமுனிவர் திருச்சிற்றம்பல தேசிகரிடத்தில் சிவதீட்சையும், சைவசந்நியாசமும், சிவஞானேபதேசமும் பெற்றனர். இராமநாதபரம் சோமசுந்தர குருவும் இந்த ஞானசாரியரிடத்தலேதான் உபதேசம் பெற்றனர். கவிராக்ஷஸ - கச்சியப்ப முனிவரும், தொட்டிக்கலை - மதுரகவி - சுப்பிரமணிய முனிவரும், 12

ஆவது மகா சந்நிதானம் திருச்சிற்றம்பல தேசிகர் பெரிய பட்டத்திலிருந்து சிவாகம ஆராய்ச்சியையே தம் பொழுது போக்காகக் கொண்டிருந்தமையாலும், சிவானந்த நிட்டையிலிருந்தமையாலும் அப்போது சின்னப் பட்டத்தில் உள்ள அம்பலவாண தேசிகர் பால் சைவசந்நியாசமூம் சவஞானோபதேசமும் பெற்றுக் கொண்டனர்.

ஸ்ரீ சிவஞான சுவாமிகள்பால் மாணுக்கர்கள் யாவரும் இடையறுத பேரன்பகொண்டு மிக அச்சத்துடன் ஒழுகிவந்தனர். மகாசந்நிதானங்களும் பேரருளு டன் நடத்திவந்தனர். திராவிடமாபாடியம், 11- ஆவது பின் வேலப்ப தேக மூர்த்திகள் பெரிய பட்டத்திலும் 12 ஆவது திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகள் சின்னப் பட்டத்தி லும் எழுந்தருளியிருந்த காலத்தில் அரங்கேற்றப்பட்டது, திராவிட மாபாடியத்தைக் காஞ்சிபுரத்திலே சுவாமிகள் எழுந்தருளியிருந்தபோது எழுதி முடித்தார்கள். பின்பு சிவஞான போதத்துக்குச் சிற்றுரையும், சிவஞான சத்தியாருக்குப் பொழிப்புரையும் செய்தருளினர். இளம் பருவத்திலேயே மாணவர்கள் சிவநெறியில் வாழவேண்டிப் பிரபந்தங்கள் பலவற்றையும் செய்தார்கள். சிவதத்துவ விவேகம், தர்க்கசங்கரகம் அன்னம்பட்டியம் முதலியவற்றையும் மொழிபெயர்தருளிஞர்கள். நன்னூலுக்குப் புத்தம் புத்துரை, இலக்கண விளக்கச் சூறுவளி, தொல்காப்பியப் பாயிரவிருத்து, முதற்சூத்திர விருத்திகளும் செய்து இலக்கண நுட்பங்களையெல்லாம் நன்கு தெளிவு படுத்தனர். சிவஞான போதம் திராவிட பாடியத்துக்கு மிக இன்றியமையாத இலக்கண இலக்கிய தர்க்கநூல் உணர்ச்கெள் பெற வேண்டுவதற்கு ஆவனவெல் லாம் திருத்தமாகச் செய்து முடித்துப் பெரும் புகழ்படைத்தனர். சில கண்டன நூல்களையும் இவர்கள் எழுதியுள்ளார்கள்.

எல்லாவற்றுனும் சிறப்புற்று விளங்கச் சிவொனுபூதிகைவந்த இவர்கள் திருவாவடுதுறையிலே ஒரு சித்தரைமாத ஆயிலியநாளில் சிவபரிபூரணம் எய்தினர்.

“*மன்னும் விசுவா வசுவருடம் மேடமதி*
*உன்னிரவி நாட்பகலோ தாயிலியம் - மன்னும்*
*திருவாளன் எங்கோன் சிவஞான தேவன்*
*தீருமேனி நீங்கு தினம்*”

என்னும் வெண்பா சுவாமிகள் சிவபரிபூரணமான நாளை உணர்த்தும்.

இவர்களைப் பிரிதலாற்றுத தொட்டிக்கலை ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர் ‘நினைத்தால் சசக்கப்போமோ' என்னும் பாடலால் தம் கருத்தை வெளிப்படுத்தினர். அன்றியும் அவர் தொட்டிக்கலையில் சுவாமிகளுடைய திருவுருவத்தை அமைத்துப் பூசித்து வழிபட்டார்.

கருணைபொழி திருமுகத்தில் திரு நீற்று நுதலும்
கண்டாரை வசப்படுத்தக் கணிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே

பிஞ்ஞகனுர் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்கள் அகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தாள்
ஒருபொழுதும் நீங்காமல் எமதுளத்தில் சிரத்தில்
ஓதிடுநா வினில் என்றும் உன்னிவைத்தே உரைப்பாம்.
திண்ண இன்பச் சேவடியுந் திருவிழியும்
திருமார்புஞ் செல்வக் கையும்
நண்ணு மன்பர்க் கருள்கருஊணத் திருமுகமும்
பசுங்குழவி நடையே யாகிப்
புண்ணி யத்தின் பொலிவாகி யற்புதக்கோ
லக்கொழுந்தாய்ப் புஊலநா யேற்குக்
கண்ஊண விட்டு நீங்காத சிவஞான
சற்குருவே! கருணை வாழ்வே!.

**இவை இவர் பாடிய தோத்திரப் பாடல்கள்.**

## வரலாறு

வைதிகசாத்திரம் மீமாஞ்சை, நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், வேதாந்தம் என ஆறும். அவற்றுள், மீமாஞ்சை சைமினிமுனிவரானும், நியாயம் கௌதம முனிவரானும், வைசேடிகம் கணாத முனிவரானும், சாங்கியம் கபில முனிவரானும், யோகம், பதஞ்சலி, முனிவரானும், வேதாந்தம் வியாச முனிவரா னும் சூத்திரரூபமாகச் செய்யப்பட்டன. அவை தரிசனம் எனவும் பெயர்பெறும். கௌதமமுனிவர் அக்கபாதர் எனவும் பெயர்பெறுவர்.

அவற்றள், நியாயம் வைசேடிகம் என்னும் இரண்டும் தருக்க நூலெனப்படும். இவற்றையும் இவற்றின் வழிநால்கஊயும் வியாக்யொனங்கஊயும் நன்கு உணர்ந்த மகா பண்டிதராகிய அன்னம்பட்டர் ஏறக்குறைய இருநூற்றிருபது வருடத்துக்குமுன் 'தருக்கசங்கிரகம்' எனப் பெயரில் ஒரு நூலும் அதற்குத் 'தருக்கசங்கரக தீபிகை' எனப் பெயரிய ஒரு வியாக்கயானமும் இயற்றினர். இவ்வண்ணம் பட்டர் தெலுங்கர், இவர் மாபாடியத்துக்குக் கையடர் இபற்றிய வியாக்கியானத்துக்கு உரையுஞ்செய்தனர்,

இத்தருக்கசங்கிரகம் சிறுவரும் எளிதில் உணரும் பொருட்டு மிகச் சுருக்கிச் செய்யப்பட்டமையால், யாண்டும் தருக்கநூல் கற்கப்புகுவோர் யாவரும் முன்னர் இதஊயே கற்ன்றனர். இதற்குப் பல வியாக்கியானங்கள் உள, அவற்றுள்: -

1. **தருக்கசங்கிரக தீபிகை: -** இது நூலாதிரியராலே செய்யப்பட்டது. இதஊ அன்னம்பட்டீயம் என வழங்குவர். இது தருக்கசங்கிரகத்துக்குச் செய்யப்பட்ட வியாக்கியானங்கள் எல்லாவற்றுள்ளும் மிக அரிதினுணர்தற்பாலது. இது முந்நூற் றைம்பது கிரந்தமுடைத்து. இவ்வியாக்கியானத்துக்கு ஐந்து வியாக்கயோனங்களுள. அவற்றுள்:

**(க) அநுமதீயம்: -** இது மாத்துவராகிய அநுமதாசாரியராலே செய்யப்பட்டது. இவர் கர்ணுடர். சற்றேறக்குறைய நூற்று எழுபது வருடத்துக்குமுன் தேகவியொகம் எய்தனர். இவ்வனுமதீயம் ஆறுயிரங் கரந்தமுடைத்து

**(உ) நீலகண்டீயம்:-** இது பல்லாரியில் இருந்த தெலுங்கராகிய நீலகண்ட சாத்திரியாராலே செய்யப்பட்டது. இவர் ஏறக்குறைய நூறு வருடத்துக்குமுன் காசியி லே தேகவியோக மெய்தினர், இந்த நீலகண்டீயம் ஆயிரத்திருநூற்றைம்பது கிரந்த முடைத்து. இதற்குத் தெலுங்கராகிய இராமபத்திரபட்டராலே இராமபத்திரீயம் என ஒரு வியாக்கியானம் செய்யப்பட்டது.

**(ங.)** தருக்க சங்கரகத்துக்கு நிருத்தசெய்த பட்டாபிராம சாத்திரியாரும் தருக்கசங்கரக தீபிகைக்கு ஒரு வீயாக்கியானம் செய்தனர்.

**(ச) முகுந்தபட்டீயம்: -** இது முகுந்தபட்டராலே செய்யப்பட்டது.

(டு) தீபிகாப்பிரகாகை: - இது தமிழ்நாட்டிலிருந்த தெலுங்கராகிய நரசிங்க சாத்திரியாராலே செய்யப்பட்டது. இவர் சித்தாந்த முத்தாவலிக்குப் பிரபை எனப் பெயரிய ஒரு வியாக்கியானம் செய்தனர். இவர் ஏறக்குறைய நூற்றுபத்து வருடத்துக்கு முன்னே தேகவியோக மெய்தினர். பிரகாசிகை ஆறாயிரங் கீரந்தமுடைத்து.

2. **நியாயபோதினி: -** இது கௌடரும் தருக்கபாடப் பிரகாசஞ் செய்தவருமாகிய கோவர்த்தன மிசிரராலே செய்யப்பட்டது. இத நானூறு கரந்தமுடைத்து.

3. **நிருத்தி: -** இது தமிழ்காட்டில் இருந்த தெலுங்கராகிய பட்டாபிராம சாத்திரியாராலே தமது புத்திரியின் பொருட்டுத் செய்யப்பட்டது. தருக்க சங்கிரகத்துக்குள்ள வியாக்கியானங்கள் எல்லாவற்றுள்ளும் இது மிக எளிதினுணர் தற்பாலது. இவர் ஏறக்குறைய நூறு வருடத்துக்கு முன்னே தேகவியோகம் எய்தினர், இந்நிருத்தி அறுநூறு கிரந்த முடைத்து.

4. **சித்தாந்த சந்திரோதயம்**: - இது கிருஷ்ண தூர்ச்சடி தீக்ஷிதராலே செய்யப்பட்டது, தருச்க சங்கரகத்துக்கு உரிய வியாக்கியானங்களுள் தருக்கசங்கரக தீபிகை ஒழித்தொழிந்த மற்றெல்லாவற்றினும் இது மிக அரிதனுணர்தற்பாலது. இது ஆயிரத்து முந்நூறு கிரந்தமுடைத்து.

5. **தருக்க சங்கிரக சந்தரிகை: -** இது மகாராட்டிரராகிய முகுந்த பட்டராலே செய்யப்பட்டது. இது ஆயிரத்திருநூறு கிரந்தமுடைத்து.

6. **பதகிருத்தியம்: -** இது கௌட க்ஷத்திரியராகிய சந்திரச் சிங்கராலே செய்யப்பட்டது. இது கங்கைக் கரையிலுள்ள நாடுகளிலே கற்கப்படுகின்றது. இது ஆயிரம் கிரந்த முடைத்து.

7. **தருக்க சங்கிரகோபநியாசம்: -** இது மகாராட்டிர சந்நியாசியாகிய மேரு சாத்திரியாராலே செய்யப்பட்டது, இது தார்க்கிகர்களாலே மிக நன்கு மதிக்கப்படுகின்றது. இது ஐந்நூறு கிரந்தமுடைத்து.

தருக்க சங்கிரகமும், தருக்கசங்கிரக தீபிகை என்னும் வியாக்கியானமும், கைலாச பரம்பரைத் திருவாவடுதுறைச் சித்தாந்த பானுவாகிய நமச்சிவாய மூர்த்திகள் மரபில் சிவஞான சுவாமிகளாலே, தமிழில் மொழிபெயர்த்தருளப்பட்டன.

உ

*ஓதரிய வாய்மைச் சிவாகமங் கட்கெலாம்*
*உற்றபே ராகரமதாய்*
*ஓங்குதிரு வாவடு துறைப்பதியில் அற்புதத்*
*தொருவடிவு கொண்டருளியே*

*பேதமுறு சமயவா திகளுள மயக்கைப்*
*பெயர்க்கும்ரச குளிகையாகிப்*
*பிரியமுட னேவந் தடுத்தவர்க் கின் பப்*
*பெருங்கருஊண மேருவாகி*

*ஆதரித் தடியேங்கள் உண்ணத் தெவிட்டாத*
*அமிர்தசா கரமாகியே*
*அழகுபொலி கஉலசைச் சிதம்பரே சுரரடிக்(கு)*
*அதிமதுர கவிதைமாரி*

*மாதவர் வழுத்தப் பொழிந்தருளி யென்றுமவர்*
*மன்னிவளர் சந்நிதியிலோர்*
*மணிவிளக் கெனவளர் சிவஞான மாதவன்*
*மலர்ப்பதம் வணங்குவாமே.*

- ஸ்ரீ சுப்பிரமணியமுனிவர்.

உ
சிவமயம்

# தருக்கசங்கிரகம்

## தருக்கசங்கிரகதீபிகை என்னும் உரையுடன்

### தற்சிறப்புப்பாயிரம்

மன்ற வாணனை மனத்திடை நிறுவிவண் துறைசை
வென்ற சீர்நமச் சிவாயமெய்க் குரவனை வணங்கி
என்ற னைப்பொருஉ மிளையவர்க் கினி துணர் வுதிப்பத்
தென்ற மிழ்ச்சொலாற் செயப்படுந் தருக்கசங் கிரகம்.

மலைமகள் மணந்த வுலகினுக் கிறையவன்
கலைமக ளாசான் கான்மலர் வணங்கிக்
கிளர்பொருட் டருக்கசங் கிரகம்
இளையோ ருளங்கொள வியம்புவ னுரையே.

எடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டுச் செயற்பாலதென ஆன்றோரொழுக்கத்தான் அனுமிக்கப்படும் சுருதியின் விதிக்கப்பட்ட வழிபடு கடவுள் வணக்கமாகிய மங்கலம் மாணாக்கர்கட்கு அறிவுறுத்தற் பொருட்டு யாப்பினுல் யாத்து அதனுல் முடிபெய்தும் பொருள் உணர்த்துகின்றுர். அற்றாக, மங்கலம் இனிதுமுடிதற்குக் காரணம் அன்று, மங்கலங்கூறியவழியும் நன்னூல் முதலியவற்றின் முடிவு காணுமையின், மங்கலங்கூறுதவழியும் தொல்காப்பியம் முதலியவற்றின்முடிவு காண்டலின், உடன் பாட்டினும் எதிர்மறையினும் நியமந் தப்புதலின் எனின்: - நன்று சொன்னுய்; நன்னூல் முதலியவற்றின் இடையூற்றின் மிகுதிப்பாட்டால் முடிவுபேறு இன்று, தொல்காப்பியம் முதலியவற்றின் நூற்குப் புறமாகவே மங்கலம் செயப்பட்டதாகலின், நியமந்தப்பியது யாண்டையது என்க.

அற்றேல், மங்கலம் செயற்பாலது என்பதற்குப் பிரமாணம் என்னை எனின்: - ஆன்றோரொழுக்கத்தான் உண்டென்று அனுமிக்கப்படும் சுருதியே பிரமாணம் என்க. ஈண்டு அனுமானம் ஆமாறு: 'மங்கலம் செயற்பாலதென வேதத்தின் விதிக்கப்பட்டது, உலக நடையும் பழிப்புமல்லாத ஆன்றோரொழுக்கமாகலின், வேள்வி முதலியன போல' எனக் காண்க, உண்டி முதலியவற்றில் சேறலை நீக்குதற்கு 'உலகநடையல்லாத' என்றும், இரவின்கண் தென்புலத்தார் கடன் ஓம்பல் முதலியவற்றில் சேறலை நீக்குதற்குப் 'பழிப்பல்லாத' என்றும் கூறப்பட்டது. பயனிலசெய்யற்க என. நீரடித்தல் துரும்புகிள்ளுதல் முதலியவையும், பழிக்கப்படுதலின், 'உலகநடையும் பழிப்புமல்லாத ஒழுக்கம்' எனவே அமைதலின், 'ஆன்றோர்' என்றது விளங்குதற் பொருட்டு. ஒழுக்கம் - ஆசரித்துவருதல்.

இதன்பொருள் வெளிப்படை. நிறுவுதல் - நிலை பெறுத்துதல். வென்ற - மேம் பட்ட. இளையோராவார் கோடலும் உள்ளத்து அமைத்தலும் வல்லுநர்; குழவிப் பருவத்தர் அல்லர் என்பதாம். இனிது உதித்தல் - வருத்தம் இன்றி உதித்தல். உணர்வு - பதார்த்த ஞானம். தருக்கம் - தருக்கித்துத் தெரிக்கப்பட்டன; அவை, திரவியம் முதலிய பதார்த்தங்கள். சங்கிரகம் - அவற்றைச் சுருக்கிக் கூறுதல். தருக்கநூல்கள் பல உண்மையின் ஈண்டுப் புதிதாகத் தருக்கநூல் கூறுவது எற்றுக்கென்னும் ஆசங்கை நீக்குதற்கு, அந்நூல்கள் விரிவுடைமையின், அவை, அறிவான். **முதிர்ந்தோர்க்கேயாம்** என்பார் இஃது 'இளையவர்க்கு' என்றும்: இந்நூற்பயன் கூறுவார் 'இனிது உணர்வு உதிப்ப' என்றும் கூறினர்.

## பதார்த்தம்

1. திரவியம், குணம், கருமம், சாமாளியம், விசேடம், சமவாயம், அபாவம் எனப் பதார்த்தங்கள் ஏழு.

## பதார்த்த விளக்கம்

திரவியம் - பொருள், குணம் - பண்பு. கருமம் - தொழில் சாமானியம் - பொதுமை, விசேடம் - சிறப்பு. சமவாயம் - ஒற்றுமைச் சம்பந்தம். அபாவம் - இன்மை.

(தீபிகை) திரவியம், குணம் என்பது பதார்த்தங்களைப் பகுக்கின்றது. பதப்போருள் பதத்துக்குப் பொருளென விரிதலின், பதத்தாற்பெயரிட்டு வழங்கற் பாலதாம் தன்மை பதார்த்தத்திற்குப் பொது விலக்கணமாதல் கூறப்பட்டது. அற்றேல் அஃதாக, திரவியம் முதலாகப் பகுத்த செவ் வெண்ணல் ஏழென்னுக்தொகை தானே பெறப்படுதலின், ஏழென்றல் பயனில்கூற்றும். எனின்: - அற்றன்று; அது பகுத்தவற் றின்மேல் பதார்த்தமில்லை என்னும் பொருட்டு ஆகலின். அற்றேல், மேல் பதார்த்தம் அளவையான் அளக்கப்படும் பொருளாயின் விலக்குதல் கூடாது, அன்றுயின் பிரத்யோகி உணர்ச்சியின்றி அபாவ உணர்ச்சி பெறப்படாமையின் விலக்கியதனல் பயன் என்னை எனின்: - அற்றன்று, தொகை கொடாதொழியின் பதார்த்தத் தன்மை இரலியம் முதலிய ஏழனுள் ஒன்றன்கண் வியாப்பியமாகாதெனவும் பொருள்படு மன்றே, அது நீக்குதற்பொருட்டு ஏழெனல் வேண்டு மென்க. மேலும் இவ்வாறே காண்க. தத்தம் அபாவத்தற்குத் தாம்தாம் பிரதயோகியாகிய தத்தம் உணர்ச்சி பெற்றுலன்றித் தத்தம் அபாவவுணர்ச்சி பெறப்படாது என்பது தருக்கநூல் துணிவு.

2. அவற்றுள், திரவியம்: பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், காலம், இக்கு, ஆன்மா, மனம் என ஒன்பது வகைத்து,

(தீபிகை) அவற்றுள் திரவியம் எ-து திரவியத்தைப் பகுக்கின்றது.

அவற்றுள் எ-து திரவியம் முதலிய ஏழனுள் என்றவாறு. திரவியம் ஒன்பது வகைத்தெனக்கூட்டுக.

பிருதிவி எ-து அவை இவை என்கின்றது. அற்றேல், இருள் பத்தாந்திரவிய மாதல் உண்மையால், திரவியம் ஒன்பதென்பது என்னை? அதுதிரவியமாதல், 'இருள் கருவடிவிற்று; இயங்குகின்றது' என்னும் வாதையில்லாத உணர்ச்சிவலியால் கருமைப்பண்பிற்கும் இயங்குதற்றோழிலுக்கும் பற்றுக்கோடாதலுண்மையின் பெறப் பட்டது; அது வடிவு உடைமையின் ஆகாயம் முதலிய ஐந்தனுள்ளும், உருவுடைமை யானும் இடையறுது இயங்காமையானும் வாயுவினும், ஒளிவடிவிற்றன்மையானும் வெம்மையின்மையானும் தேயுவினும், குளிர்ச்சியின்மையானும் கருவடிவிற்று ஆகலானும் நீரினும், நாற்றமுடையதன்மையானும் பரிசமின்மையர்னும் நிலத்தி னும் அடங்குவதன்றாகலின், இருள் பத்தாந்திரவியமென்பது பெறப்படுமாலோ எனின்: அற்றன்று, இருள் வடிவுடைப்பொருளன்று, ஒளியோடுங்கூடாத விழியால் கவரப்படுதலின் ஆலோகத்தின் அபாவம் போலும், வடிவுடைப் பொருள் விழியால் கவர்தற்கு ஒளியே காரணமெனக் கருதப்படுதலின், பேரொளியுடைய தேயுப் பொது மையின் அபாவமே இருளென்பது பெறப்படுதலின் என்க. 'இருள் ஆண்டியங்கு கின்றது; கருவடிவிற்று என்னும் உணர்ச்சி மயக்கத்தால் தோன்றியதே யாம்; ஆதலின், பொருள் ஒன்பதே என்பது பெற்றும்.

பொருண்மைச் சாதியுடைமையாதல் குணம் உடைமையாதல் பொருட்கிலக் கணமெனக்கொள்க, இலக்கணம் அவ்வியாத்த, அதிவியாத்தி, அசம்பவம் என்னும் முக்குற்றங்களும் நீங்கிய தன்மை. அதுவே சிறப்பியல்பு என்று உரைக்கப்படும். சிறப்பு இலக்கியத் தன்மையை வரைந்துகொள்வதனேடு நியதமாய் ஒப்ப நிற்பது. பிறவற்றினின்றும் வேறுபடுப்பதே இலக்கணம் எனக்கொள்ளின், வேறுபடுத்தலினும் அபிதேயத்தன்மை முதலியவற்றினும் *அதிவியாத்தி நீக்குதற்கு அதின் வேறுய என இயல்பிற்கு அடை கொடுக்கற்பாற்று. அபிதேயம் - பெயரிட்டு வழங்கற் பாலதாந் தன்மை. வழங்குவதூஉம் இலக்கணத்திற்குப் பயனுகக் கொள்ளின், அவ்வடை வேண்டா என்று உணர்க, வேறுபடுதலும் வழங்குதற் பொருட்டே யாகலின் எனக் கொள்க. அவ்வியாத்தி - இலக்கியத்தின் ஏகதேசத்தின் இலக்கணம் இல்லாமை; அது 'ஆவிற்குக் கபில நிறத்தன்மை'. அதிவியாத்தி - இலக்கியம் அல்லாததன்கண்ணும் இருப்பது: அது 'ஆவிற்குக் கோடுடைமை'. அசம்பவம் - இலக்கிய முழுதினும் இன்மை; அது 'ஆவிற்கு ஒற்றைக்குளம்பு உடைமை' என்க, குணமுடைமை இரவியத்திற்கு இலக்கணமென்றல் பொருந்தாது. முதற்கணத்தில் தோன்றி, அழிவு படுங் குடத்திலே அவ்வியாத்திக் குற்றம் வருமாலோ எனின்:- அற்றன்று, குணத் தோடு ஒருங்கு நிற்பதாய உண்மைத்தன்மையின் வேறுய சாதியுடைமை என்பது கருத்தாகலின் என்க. அற்றேல், 'உருவமொன்று சுவையின் வேறு' என்னும் வழக்கு உண்மையின் உருவம் முதலிய வற்றின் அதிவியாத்து வருமாலோ எனின்:- அற்றன்று, ஒருபொருளோடு ஒற்றித்து நிற்றலால் அது பற்றியே அவ்வாறு வழங்குவ்தலல்லது பண்பிற்குப் பண்பு கோடல் பொருந்தாமையின்,

*'அதிவியாத்தியும் அவ்வியாத்தியும் நீக்குதற்கு அவற்றின் வேறுய' எனவும் பாடம்.

3. குணம்:- உருவம், இரதம், கந்தம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம். விபாகம், பரத்துவம். அபரத்துவம், குருத்துவம். திரவத்துவம். சிநேகம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, வெறுப்பு, முயற்சி, தர்மம், அதர்மம், வாசஊன என இருபத்து நான்கு வகைத்து,

(தீபீகை) குணம் எ-து குணங்கஊப் பகுக்கின்றது. குணமாவது திரவியம் கருமம் என்னும் இரண்டற்கும் வேறுய்ப் பொதுவியல்பு உடையது. குணத்தன்மை யாகிய சாதியுடையதெனினும்ஆம். அற்றேல் எண்மை, மென்மை, வன்மை முதலிய னவும் உண்மையின், குணம் இருபத்து நான்கு என்றது என்ஊயெனின்:- அற்றன்று, திண்மையின் அபாவமே எண்மை ஆகலானும் அவயவக்கூட்ட விசேடமே மென்மை வன்மைகளாகலானும் என்க.

4. கருமம்: எழும்பல், வீழ்தல், வஊதல், நிமிர்தல், நடத்தல் என ஐவகைத்து,

(தீபிகை) கருமம் எ - து கருமத்தைப் பகுக்கின்றது. கருமமாவது சையோகத்தின் வேறுய்ச் சையோகத்திற்கு அசமவாயி காரணமாய் உள்ளது. கருமத் தன்மையாகிய சாதியுடைய தெனினுமாம். சுழற்சி முதலியன நடத்தலின் அடங்கு மாதலின், ஐந்தென்றல் பொருந்துமாறுணர்க.

5. சாமானியம்: பரம். அபரம் என இருவகைத்து.

(தீபிகை) சாமானியம் எ - து சாமானியத்தைப் பகுக்கின்றது. மிகுதியினிரு ப்பது பரசாதி. குறைவினிருப்பது அபரசாதி. சரமானியம் முதலிய நான்கினும் சாதியின்று.

6. விசேடம் நித்தியப் பொருள்களின் இருப்பன. அவை, எண்ணிறந்தனவே யாம்.

(தீபிகை) விசேடம் எ - து விசேடத்தைப் பகுக்கின்றது. நித்தியப் பொருள்களான பிருதிவி முதலிய நான்கின் பரமாணுக்களும் ஆகாயம் முதலிய ஐந்துமாம்.

7. சமவாயம் ஒன்றுதானே.

(தீபிகை) சமவாயம் எ - து சமவாயத்திற்கு வேறுபாடு இல்ஊல என்கின்றது.

8. அபாவம் முன்னபாவம். அழிவுபாட்ட பாவம், முழுதுமபாவம். ஒன்றினெ ன்றபாவம் என நான்குவகைத்து.

(தீபிகை) அபாவம் எ - து அபாவத்தைப் பகுக்கின்றது,

## 1. திரவியம்

இனி இவற்றின் இயல்பாவன:

9 பிருதிவியாவது நாற்றமுடையது, அது நித்தம், அநித்தம் என இருவகைத்து, நித்தம் பரமாணுரூபம்; அநித்தம் காரியரூபம். மறித்தும், சரீர இந்திரிய விடய வேறு பாட்டால் மூவகைப்படும், சரீரம் நம்மனோர்க்குள்ளது. இந்திரியம் கிராணம்; நாற்றத் தைக் கவர்வது; அது நாசி நுனியில் இருப்பது. விடயம் மண், கல் முதலியனவாம்,

(தீபிகை) பிருதிவியாவது எ - து உத்தேசமுறையானே முதற்கண் பிருதிவியின் இலக்கணம் கூறுகிறது. உத்தேசம் - பெயர் மாத்திரையானே பொருளை எடுத்துரைத்தல், யாண்டும் உத்தேச முறைமைக்கு இச்சையே காரணம். நாற்றமு டைமை பிருதிவியின் இலக்கணமாயின, நறுநாற்றப் பொருளும் தீநாற்றப் பொருளு மாகிய அவயவங்களான் ஆக்கப்படும் திரவியத்தின் ஒன்றுக்கொன்று மாறுபாட்டால் நாற்றம் உண்டாகாமையின், அவ்வியாத்திக்குற்றம் தங்கும்; ஆண்டு நாற்றத் தோற்றம் பொருந்தாதென்னற்க, அவயவ நாற்றம் *புலப்படுதலின், அவ்விரண்டன் கூட்டத்தானய கலப்பு நாற்றம் †ஒன்று எனக் கோடல் பொருந்தாமையின்; இன்னும், தோன்றியபொழுதே அழிவுபடும் குடத்திலும் அவ்வியாத்து வருமாலோ எனின்:- அற்றன்று, நாற்றத்தோடு ஒருங்கிருக்கும் ‡பொருண்மைக்கு அபரமான சாதி யுடை மையென்பதே கருத்தாகலின். அற்றேல், நீர் முதலியவற்றின் நாற்றம் புலப்படு தலின் அதிவியாத்த வருமாலோ எனின்:- அற்றன்று. உடன்பாட்டானும் எதிர்மறை யானும் ஆண்டுப் பிருதிவி நாற்றமே கொள்ளக்கடத்தலின். அற்றுயினும், காலம் எல்லாவற்றிற்கும் பற்றுக்கோடாகலின் எல்லா இலக்கணங்கட்கும் காலத்தின்கண் அதிவியர்த்தி வருமாலோ எனின்:- அற்றன்று எல்லாவற்றிற்கும் பற்றுக்கோடாதற்கு ஏதுவாய சம்பந்தத்திற்கு வேறுய் சம்பந்தத்தானே இலக்கணத்தற்கு உரிமைகோ டலின்.

---

* புலப்படுதலின் எனின், † 'ஒன்று உண்டெனக் கோடல்'
‡ 'பொருண்மைச் சாதிக்கு அபரமான' என்பன பாடமாகக்கொள்க.

---

அது நித்தம் எ - து பிருதிவியைப் பகுக்கன்றது. அழிவு பாட்டபாவத்துற்கு எதிர்மறையாகாதது நித்தம். அதற்கு எதிர்மறையாவது அநித்தம்.

மறித்தும் எ - து வேறோாற்றாற் பகுக்கின்றது. சரீரம் ஆன்மாவின் போகத்திற்கு இடம். எதனல் வரைந்து கொள்ளப்பட்ட ஆன்மாவிற்குப் போகம் நிகழும். அது போகத்திற்கு இடம்; அதுவே சரீரம் என்பதாம். போகமாவது இன்பத் துன்பங்கள் புலப்படத் தோன்றல். சத்தம் அல்லாத உற்பூத விசேட குணங்கட்குப் பற்றுக்கோடாகாது. ஞானத்திற்குக் காரணமாய மனக்கூட்டத்திற்குப் பற்றுக் கோடா யுள்ளது இந்திரியம். சரீரமும் இந்திரியமுமல்லாத எல்லாம் விடயமென்க. எனவே நாற்றமுடைய சரீரம் பிருஇவி சரீரம்; நாற்றமுடைய இந்திரியம் பிருதிவி

இந்திரியம்; நாற்றமுடைய விடயம் பிருதிவி விடயமாதல் இலக்கண மென்பது பெற்றும்.

சரீரம் எ - து பிருதிவி சரீரம் இது என்கின்றது.

இந்திரியம் எ - து இந்திரியம் இது என்கிறது. 'கிராணம்' எனப் பெயர் கூறி, 'நாற்றத்தைக் கவர்வது' எனப் பயன் கூறியவாறு. 'நாசிநுனியில் எனப் பற்றுக்கோடு கூறியவாறு. இவ்வாறு மேலும் உய்த்துணர்க.

விடயம் எ - து விடயம் இது என்€ன்றது.

10. அப்புவாவது குளிர்ந்த பரிசமுடையது. அது நித்தம் அநித்தமென இருவகைத்து. நித்தம் பரமாணுரூபம்; அநித்தம் காரியரூபம். மறித்தும், சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மூவகைப்படும், சரீரம் வருணலோகத்தினுள்ளது. இந்திரியம் இங்நுவை; சுவையைக்கவர்வது. அது நாவினுனியிலிருப்பது. விடயம் ஆறுகடல் முதலியனவாம்.

(தீபிகை) அப்புவாவது எ - து அப்பிலக்கணம் கூறுகிறது. தோன்றியபொழுதே அழிவுபடும் நீரின்கண் அவ்வியாத்தி நீக்குதற்குக் குளிர்ந்த பரிசத்தோடு ஒருங்கிருக்கும் *பொருண்மைக்கு அபரமான சாதியுடைமை என்பது கருத்தாகக் கொள்க. 'தண்ணென்றது சிலாதலம்' என்புழித்தட்பம் தோன்றுதல் நீரின் சம்பந்தத்தால் ஆகலின், ஆண்டு அதிவியாத்தியின்மையும் உணர்க. ஏனையவனைத்தும் முன்னுரைத்தவாறு உரைத்துக்கொள்க.

---

* 'பொருண்மைச் சாதிக்கு' எனவும் பாடம்.

---

11. தேயுவர்வது சுடும்பரிசம் உடையது. அது நித்தம், அநித்தம் என இருவகைத்து. நித்தம் பரமாணுரூபம். அநித்தம் காரியரூபம். மறித்தும், சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மூவகைப்படும். சரீரம் சூரியலோகத்துள்ளது. இந்தரியம் சக்ஷு; உருவத்தைக்கவர்வது. அது கண்ணுறை கருமணியினுனியினிருப்பது. விடயம் மண்ணினுள்ளதும் வீண்ணினுள்ளதும் வயிற்றினுள்ளதும், ஆகரத்தினுள்ளதும் என்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்து, அவற்றுள், மண்ணினுள்ளது நெருப்பு முதலியன. விண்ணினுள்ளது மின் முதலியன. அவை நீரையே இந்தனமாக உடையன. வயிற்றினுள்ளது உண்ட உணவு பரிணமித்தற்கு ஏதுவாயிருப்பது. ஆகரத்தினுள்ளது பொன் முதலியனவாம்.

(தீபிகை) தேயுவாவது எ-து தேயுவிலக்கணம் கூறுகின்றது. 'நீர் சுடுகின்றது' என்புழிச் சூடு புலப்படுதல் தேயுவின் சம்பந்தத்தால் ஆகலின் ஆண்டு அதிவியாத்தியின்மையும் உணர்க.

விடயம் மண்ணினுள்ளதும் எ-து. விடயத்தைப் பகுக்கின்றது. சுவர்ணம் பிருதிவியின் கூறு; பீதத்துவமாயும் குருத்துவமாயும் இருக்கையால், அரிசனம் போலே எனின்:- அற்றன்று, எரிகின்ற தழல் கூடியவழி நெய் முதலியவற்றின் நெகிழ்ச்சிக் குணத்திற்கு அழிவு காண்டலானும், நீரினிடை நின்ற நெய்யின்கண் நெகழ்ச்சிக்கு அழிவுகாணுமையானும் தடையில்லாதவழி எரிதழலின் கூட்டம் காரணமாகப் பார்த்திவ நெகழ்ச்சிக்கு அழிவுபாடாகிய காரியம் பிறத்தல் துணியப் படுவதாம்; ஆகவே பொன்னிற்கு எரிதழல் கூடிய வழியும் அழிவுபடாத நெகிழ்ச்சி க்கு இடமாயிருத்தலால், பிருதிவியின் கூறென்றல் பொருந்தாமை பெற்றும். பெறவே, ஆண்டுப் பொன்மை நிறமுடைய திரவியத்தினெகிழ்ச்சி அழியாமல் தடுப்பதற்கு நெகழ்ச்சியுடைத் திரவியம் வேறென்று உண்டெனல்வேண்டும். வேண்டவே. அஃது ஒருநிமித்தத்தானுய நெகிழ்ச்சக்கு இடமாயிருத்தலின் இயல் பானே நெகழ்ச்சியுடைய நீரின் கூறென்றலும், உருவமுடைமையின், வாயு முதலிய வற்றின் அடங்குமென்றலும் பொருந்தாமையின் தேயுவின் கூறுதல் பெறப்பட்டது என்க. அதன் வெம்மைப் பரிசமும் ஒளிரும் வெண்மையும் புலப்படாமை, அதனைப் பொதிந்த பிருதிவிக் கூற்றின் உருவமும் பரிசமும் அவற்றைத் தடுத்தலான் என்க.

12. வாயுவாவது உருவமின்றிப் பரிசமுடையது. அது நித்தம், அநித்தம் என இருவகைத்து. நித்தம் பரமாணுரூபம். அநித்தம் காரியரூபம். மறித்தும், சரீர இந்திரிய விடய வேறுபாட்டால் மூவகைப்படும், சரீரம் வாயுலோகத்தினுள்ளது. இந்திரியம் துவக்கு; பரிசத்தைக் சுவர்வது; அது சரீரமெங்குமிருப்பது. விடயம் மரம் முதலியன அசைதற்கு ஏதுவாயுள்ளது. சரீரத்தினகத்துச் சஞ்சரிக்கும் வாயுப் பிராணன் எனப்படும்; அஃது ஒன்றுயினும், உபாதிவேறுபாட்டால் பிராணன் அபானன் முதலிய பெயர்பெறும்,

(தீபிகை) வாயுவாவது எ-து வாயுவிலக்கணம் கூறுகின்றது. ஆகாயம் முதலியவற்றின் அதி வியாத்தி நீக்குதற்குப் 'பரிசமுடையது' என்றும், பிருதிவி முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்கு 'உருவமின்றி' என்றும் கூறப்பட்டது.

சரீரத்தனகத்து எ-து பிராணன் யாண்டு அடங்கு மென்னும் கடாவிற்கு விடை கூறுகின்றது,

அஃது எ-து பிராணன் ஒன்றே, இடவேறுபாட்டால் பிராணன் அபானன் முதலிய பெயர்களான் வழங்கப்படும் என்றவாறு, வாயுவுண்மை பரிசத்தான் அனுமிக்கப்படும். அங்ஙனமன்றே, வளியுளருங்கால் வெப்பமும் தட்பமும் இல்லாத பரிசம் புலப்படுமன்றே: அப்பரிசம் ஒரு பொருளைப் பற்றியே நிற்கும், உருவம்போல் குணமாகலின், அதற்குப் பற்றுக்கோடு பிருதிவி என்பது பொருந்தாது புலப்பட்ட பரிசமுடைய பிருதிவியின் கூற்றிற்குப் புலப்பட்ட உருவமுடைமை நியமமாகலின், நீர் தேயுக்களுமன்று தட்பமும் வெப்பமுமின்றி இருத்தலின், வியாபகப்பொருள் நான்குமல்ல; அவற்றுள் ஒன்றன் குணமாயின் எங்கும் புலப்படுக எனல் வேண்டு தலின், மனமும் அன்று, பரமாணுவின் பரிசம் இந்திரியத்திற்குப் புலனுகாமையின், ஆதலால் அனுபவிக்கப்படும் பரிசத்திற்குப் பற்றுக்கோடு யாது அது வாயு என்று

அறிக. அற்றேல், வாயு அனுமிக்கற்பாலது என்றது என்னை? குடம் போலக் காட்சிப் பரிசத்தற்குப் பற்றுக்கோடாகலின் காட்சிப் பொருளேயாமாலோவெனின்:- அற்றன்று. ஆண்டு உற்பூத உருவமுடைமை உபாதியாகலின், அது திரவியமாய் புற இக்தரியக் காட்டுப் பொருளாயிருக்கும் இடமெங்கும் உற்பூதவுருவம் உண்டெனச் சாத்தியத்தில் வியாபித்தலும், வாயுவாகிய பக்கத்தின்கண் கூறிய ஏதுவின் வியாபியாமையும் அறிக.

அற்றேல், வெந்நீரின் கண்ணதாகிய தேயுவும் காட்சிப் பொருளன்றுதல் வேண்டுமால் எனின்:- நன்று சொன்னுய். அதுவே எமது கோட்பாடென்க. இங்ஙனம் கூறியவாற்றுல், உருவமின்மையின் வாயுக் காட்சிப்பொருள் அன்று என்பது அறிக.

இனிக் காரியமாகிய பிருதிவி முதலிய நான்கின் தோற்ற ஓடுக்கமுறையா மாறு - இறைவன் உலகைத் தோற்றுவிப்பாம் என்னும் இச்சைவயத்தால் பரமாணு க்களில் கிரியை உண்டாம்; அதனுல் பரமாணு இரண்டுகூடித் துவியணுகந் தோன்றும்; துவியணுகம் மூன்றுகூடித் இரியணுகமாம்; இவ்வாறே சதுரணுகம் முதலியன முறையானே தோன்றுதலின், மாபிருதிவி, மா அப்பு, மா தேயு. மா வாயுக்களாம். இவ்வாறு தோன்றிய பொருள்களை ஒடுக்குவாம் என்னும் இச்சை வயத்தால் பரமாணுக்களிரண்டின் கூட்டத்திற்கு அழிவுபாடுண்டாங்கால் துவியணு கம் அழியும்; அதன் பின்னர்த் திரியணுகம் சதுரணுகமென இவ்வாறே மா பிருதிவி முதலியன அழியுமென்று உணர்க. அசமவாயிகாரண அழிவுபாட்டால் தரியணுகம் அழியுமென்பது சம்பிரதாயம். யாண்டும் அசமவாயிகாரண அழிவுபாட்டானே திரவி யத்திற்கு அழிவுபாடென்பர் நவீனர்.

பரமாணுவுண்மைக்குப் பிரமாணம் என்னெனிற் கூறுதும், ‘சாளரத்தின் நுழையும் என்றூழ்க்கஇரின் கண் மிக நுண்ணியதாகித் தோன்றுவது யாது, அஃது அவயவத்தோடும் கூடியது, குடம்போலக் கட்புலப்படும் பொருளாகலின்’ எனத் தரியணுக உண்மைபெற்றும், “திரியணுகத்தின் அவயவமும் அவயவத்தோடு கூடியது, நூல்போலப் பெரிதைத் தோற்றுவிப்பதாகலின்” என்பதனுல் துவியணுகம் உண்மை பெறப்பட்டது. துவியணுகத்திற்கு அவயவம் யாது அதுவே பரமாணு; நித்தமாயுள்ளது. அதுவும் காரியமெனின் வரம்பின்றியோடும் என்க. தோற்றம் ஒடுக்கம் உண்மைக்குப் ‘புனருற்பவம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று’ என்பது முதலிய சுருதியே பிரமாணம். காரியமான திரவியமெல்லாம் அழிவது அவாந்தரப் பிரளயம் எனவும், காரியமான பாவ பதார்த்த மெல்லாம் அழிவது மாப்பிரளயம் எனவும் தெரிக்துகொள்க.

**13.** ஆகாயமாவது சத்தகுணமுடையது. அது ஒன்றுய், வியாபகமாய், நித்த மாய் இருக்கும்.

(தீபிகை) ஆகாயமாவது எ-து ஆகாயத்தின் இலக்கணம் கூறுகின்றது.

ஒன்ருய் எ-து ஆகாயமும் பிருதிவி முதலியன போலப் பலவெனக்கொள்ளற்க என்றவாறு. பல என்பதற்குப் பிரமாணம் இன்மையின் என்பதாம்.

வியாபகமாய் எ-து ஒன்றென்றதனுனே யாண்டும் நிகழ்தலின் வியாபகத் தன்மை கொள்ளற்பாற்று என்றவாறு. வியாபகமாவது - வடிவுடைப்பொருள் எல்லாவற்றினும் சையோதத்திருத்தல். வடிவுடைப் பொருளாதல் வரம்புபட்ட பரிமா ணமுடைமை; தொழிலுடைமை என்றலும் ஆம்.

நித்தமாய் எ-து வியாபகத்தன்மையானே ஆன்மாவைப் போல் நிலையுடைப் பொருள் என்றவாறு,

14. காலமாவது இறப்பு முதலிய வழக்கிற்கு ஏது வாயிருப்பது அது ஒன்ருய், வியாபகமாய், நித்தமாய் இருக்கும்.

(தீபிகை) காலமாவது எ-து காலத்தின் இலக்கணம் கூறுகின்றது. காலம் எல்லாவற்றிற்கும் பற்றுக்கோடாயிருப்பது; எல்லாக் காரியங்கட்கும் நிமித்த காரணம்.

15. திக்காவது கிழக்கு முதலிய வழக்கிற்கு ஏதுவாயுள்ளது. அதுவும் ஒன்ருய், வியாபகமாய், நித்தமாய் இருக்கும்.

(தீபிகை) திக்காவது எ-து திக்கிலக்கணம் கூறுகின்றது. திக்கும் எல்லாக் காரியங்கட்கும் நிமித்த காரணம்,

16. ஆன்மாவாவது ஞானத்திற்கிடமாயுள்ளது. அது பரமான்மா சீவான்மா, என இருவகைத்து. அவற்றுள் பரமான்மா ஈசுவரன், முற்றறிவன், ஒருவனே. சீவான்மா சரீரந்தோறும் வேருய், வியாபகமாய், நித்தமாய் இருப்பன.

(தீபிகை) ஆன்மாவாவது எ-து ஆன்மாவின் இலக்கணம் கூறுகின்றது,

அது எ-து ஆன்மாவைப் பகுக்கன்றது.

அவற்றுள், பரமான்மா எ-து பரமான்மாவின் இலக்கணம் கூறுகின்றது. நித்தமான ஞானத்திற்கு இடமாதல் ஈசுரனிலக்கணம். அற்றேல் ஈசுரன் உண்டென்பதற்குப் பிரமாணம் என்னை? அருவப்பொருளாதலால் புறஇந்திரியக் காட்சி அன்று. ஆன்மாக்களின் சுகம் துக்கம் முதலியவற்றின் வேருதலால் அக இந்தரியக்காட்சியுமன்று; இலிங்கமின்மை. யான் அனுமானமும் அன்ருல் எனின்:- அற்றன்று, 'அங்குரம் முதலியன கருத்தாவையுடையன, காரியமாகலின், குடம் போலும்' என்னும் அனுமானம் பீரமாணம் ஆகலான் என்பது. கருத்தா உபாதானத் தைப் புலப்படக்காணும் அறிவு இச்சை செயல்களையுடைய பொருள். உபாதானம் சமவாயிகாரணம். பரமாணு முதலிய நுண்ணிய பொருள் எல்லாவற்றையும் காண்ட

லின், ஈசுரன் முற்றறிவன்; 'இறைவனுவான் ஞான மெல்லா மெல்லா முதன்மை அனுக்கரகமெலாமியல்புடையான்' என்றற்றெடக்கத்து ஆகமமும் பிரமாணமென அறிக.

சீவான்மா எ-து சீவனிலக்கணம் கூறுகின்றது, சுகம் முதலியன உடைமை சீவான்மாவின் இலக்கணம். அற்றேல், 'யான் மனிதன்' 'யான் பார்ப்பான்' என யாண்டும் யான் என்னும் உணர்விற்குச் சரீரமே வீடயம் ஆகலின், சரீரமே ஆன்மா வெனின் படும் இழுக்கு என்ஊ எனின்:- அற்றன்று. சரீரமே ஆன்மா என்பார்க்குக் கை கால் முதலிய சரீரம் நசித்தலால் ஆன்மாவும் நசித்ததெனல் வேண்டும் ஆகலின் என்க. ஆயின், இந்திரியங்கள் ஆன்மா என்ஞமோ எனின்:- என்ஞம்; 'குடத்தைக்கண்ட யானே இப்போழுது குடத்தைத் தீண்டினேன்' என்னும் தொடர்ச்சி யறிவு நிகழாதொழிதல் வேண்டுதலின், ஒருவன் அனுபவித்ததஊ மற்றெவன் ஒட்டி யுணர்தல் கூடாமையுணர்க. அதனுல் சீவான்மா உடம்பு பொறி முதலிய வற்றின் வேறு எனப்படும், சுகம் முதலியவற்றின் வேறுபாட்டான் உடம்புதோறும் வெவ்வேறென உணர்க. பரமாணு எனின் உடம்புமுழுதும் வியாபித்த சுக துக்க அனுபவம் கூடாதாகலானும், இடைப்பட்ட பரிமாண முடையதெனின் அநித்தமாதல் வேண்டும்; வேண்டவே செய்த விஊயழிந்து செய்யாதவிஊ தோன்றிற்றெனல் வேண்டுமாகலானும், அவ்வாறன்றி நித்தமாய் வியாபகமாயுள்ளது சீவான்மா என்று உணர்க.

17. மனமாவது சுகம் முதலிய அனுபவத்திற்குக் கருவியாகிய இந்திரியம். அதுவும் உயிர்தோறும் நியதமாயிருத்தலின் அநேகமாய், பரமாணுரூபமாய், நித்தமாய் இருக்கும்.

(தீபிகை) மனமாவது எ - து மனத்தின் இலக்கணம் கூறுகின்றது. பரிசமின்றிச் செயலுடைத்தாதல் மனத்தின் இலக்கணம்.

அதுவும் எ- து மனத்தைப் பகுக்கன்றது. ஒவ்வோரான்மாவிற்கு ஒவ்வொரு மனமாக, ஆன்மாக்கள் அநேகமாகலின், மனமும் அநேகம் என்றவாறு. இடைப்பட்ட பரிமாணமெனின் அநித்தமாய் முடியுமாகலின், 'பரமாணு' எனப்பட்டது. அற்றேல், மனம் வியாபகம், பரிசமல்லாத திரவியமாகலின், ஆகாயம்போலும் எனின்படும் இழுக்கென்ஊ எனின்; மனம் வியாபகமாயின் ஆன்மாவிற்கும் மனத்திற்கும் சையோகம் கூடாமையின் ஞானம் உண்டாகாதாதல்வேண்டும் என்க. வியாபகப் பொருள் இரண்டற்குச் சையோகம் உண்டெனின் நன்றுசொன்ஞய்; அச்சையோகம் நித்தமாகலின் உறக்கமின்றி யிருத்தல்வேண்டும். சுழுமுஊ நாடியின் வேறுய இடத்து ஆன்மாவிற்கும் மனத்திற்குமுளதாகிய சையோகம் எக்காலமும் உண்மை யான் என்க. அணுவாயின் 'மனம் சுழுமுஊநாடியின் ஒடுங்கிய காலத்துத் துயில் கூடும், ஓடுங்காதகாலத்து அறிவு நிகழும்' என்பதஞல் அணுவாதல் பெறப்பட்ட து.

## 2. குணம்

18. உருவம் விழிமாத்திரத்தால் கவரப்படும் குணம். அதுவும் வெண்மை, கருமை, போன்மை, செம்மை, பசுமை, புகைமை, சத்திரம் என்னும் வேறுபாட்டால் எழுவகைத்து. பிருதிவி அப்புத் தேயுக்களிலிருப்பது. அவற்றுள், பிருதிவியில் எழு வகையும் உள்ளது. நீரில் விளங்கா வெண்மை தேயுவில் விளக்கமான வெண்மை.

(தீபிகை) உருவம் எ - து உருவத்தின் இலக்கணம் கூறுகின்றது. எண் முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்கு 'மாத்திரம்' என்றும், உருவத்தன்மையா கிய சாதியின் அதிவியாத்தி நீக்குதற்குக் 'குணம்' என்றும் கூறப்பட்டது. சித்திர ரூபத்தை வேறு பிரித்ததென்ஊன? வியாபியாதிருக்கும் கருமை முதலியவற்றின் கூட்டமே சித்தரரூபமாலோ எனின்:- அற்றன்று; வியாபித்தருத்தலே உருவத்திற்கு நியமமாகலின். அற்றேல், சத்திர கலிங்கத்தில் அவயவ உருவு தோன்று மென்னு மொவெனின்:- என்னும்; அவயவிக்கு உருவம் இன்மையான், ஆடை காட்சிப் பொருளன்றுதல் பெறப்படுமாகலின். காட்சியைப் பயப்பது உருவமென்னுது உருவுடைப் பொருளின் சமவேதமெனக் கோடல் மிகையாமென மறுக்க, இதனுனே ஆடை காட்சிப் பொருளாதல் வேறெென்றுல் பெறப்படாமையின் சத்திரவுருவம் உண்டென்பது பெற்றும்.

19. இரதம் நாவினுல் கவரப்படும் குணம் அதுவும் தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, காழ்ப்பு, கைப்பு, துவர்ப்பு என்னும் வேறுபாட்டால் அறுவகைத்து. மண்ணினும் நீரினும் இருப்பது. மண்ணில் ஆறுவிதமும்; நீரில் தித்திப்பு ஒன்றே.

(தீபிகை) இரதம் எ-து சுவையின் இலக்கணம் கூறுகின்றது, உருவம் முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்கு 'நாவினுல் கவரப்படுவது' என்றும், சுவைத்தன்மையின் அதிவியாத்தி நீக்குதற்குக் 'குணம்' என்றும் கூறப்பட்டது.

மண்ணினும் எ - து சுவைக்குச் சார்பு கூறுகின்றது.

20. கந்தம் மூக்கினுல் கவரப்படும் குணம். அதுவும் நறுநாற்றம் தீநாற்றம் என இருவகைத்து. பிருதிவியின் மாத்திரம் இருப்பது,

(தீபிகை) கந்தம் எ-து நாற்றத்இன் இலக்கணம் கூறுகின்றது. நாற்றத் தன்மையின் அதிவியாத்தி நீக்குதற்குக் 'குணம்' என்றும், உருவம் முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்கு 'மூக்கினுல் கவரப்படுவது' என்றும் கூறப்பட்டது.

21. பரிசம் துவக்கிந்திரியத்தான் மாத்திரம் கவரப்படும் குணம். அது குளிர்ச்ி, சூடு, குளிர்ச்சியுஞ் சூடுமில்லது என்னும் வேறுபாட்டால் மூவகைத்து, பிருதிவி அப்புத் தேயு வாயுக்களிலிருப்பது. அவற்றுள், நீரில் குளிர்ச்சி, தேயுவில் சூடு, பிருதிவி வாயுக்களில் குளிர்ச்சியுஞ்சூடும் இல்லாத பரிசம்.

(தீபிகை) பரிசம் எ - து ஊற்றிலக்கணம் கூறுகின்றது. பரிசத்தன்மையின் அதிவியாத்தி நீக்குதற்குக் 'குணம்' என்றும், சையோகம் முதலியனவற்றின் அதிவியாத்தி நீக்குதற்கு 'மாத்திரம்' என்றும் கூறப்பட்டது.

22, உருவம் முதலிய நான்கும் பிருஇவியின் பாகத்தாற்றேன்றுவனவாய், அநித்தியமாய் இருக்கும். மற்றவற்றின்பாகத்தானன்றி இயல்பாய், நித்தமும் அநித்த முமாயிருக்கும். நித்தப்பொருளைச் சேர்ந்தவை நித்தம். அநித்தப்பொருளைச் சேர்ந் தவை அநித்தம்.

(தீபிகை) பாகத்தான் எ - து பாகம் தேயுவின் கூட்டம். அதனுல் முன்னுருவம் அழிந்து வேற்றுருவம் தோன்றும் என்றவாறு. 'ஈண்டுப் பாகம் பரமாணுக்களுக்கே' துவியணுகம் முதலியவற்றிற்கு அன்று. ஆதலால், பாகமாங்காறும் சுள்ளையில் வைத்த குடத்தில் பரமாணுக்களுக்கு வேற்றுருவம் உண்டாயவழிப் பசுங்குடம் கெட்டு மீளத் துவியணுகம் தோன்றுதல் முதலிய முறையானே செங்குடம் பிறக்கும். ஆண்டுப் பரமாணுக்கள் சமவாயிகாரணம்; தேயுவின் கூட்டம் அசமவாயி காரணம்; ஊழ்முதலியன நிமித்தகாரணம். துவியணுகம் முதலியவற்றின் உருவத்தி ற்குக் காரண உருவம் அசமவாயி காரணம் என்பர் பீலுபாகவாதிகளாகிய வைசேடிகர், பீலு அணுவென்பன ஒரு பொருட்கிளவி. முற்குடத்துக்ஃகக் கேடின்றி யோ பரமாணு முடிவான அவயவங்களினும் அவயவியினும் ஒருங்கே வேற்றுரு வம் பிறக்கும் என்பர். பிடரபாக வாதிகளாகிய நையாயிகர். பிருதிவியின் பரமாணு க்களின் உருவம் முதலியன அநித்தம் என்றதூஉம் இதனுனே என்பதாம்.

மற்றவற்றின் எ - து நீர் முதலியவற்றின் என்றவாறு,

நித்தப்பொருளைச் சேர்ந்தவை எ-து பரமாணுக்களைச் சேர்ந்தவை என்றவாறு.

அநித்தப்பொருளைச் சேர்ந்தவை எ- து துவியணுகம் முதலியவற்றைச் சேர்ந்தவை என்றவாறு. உருவம் முதலிய நான்கும் உற்பூதமாயுள்ளன காட்சிக்குப் புலனும்; உற்பூதம் அல்லாதவை காட்சிக்குப் புலனுகா எனக்கொள்க. உற்பூதத் தன்மையாவது காட்சியைப் பயப்பதொரு தரும விசேடம். அதன் இன்மை அநுற்பூத த்தன்மை என்பதாம்.

23. சங்கை ஒருமை முதலிய வழக்கிற்குக் காரணம். சங்கை எனினும் எண் எனினும் ஒக்கும். அது ஒன்பது பொருளினும் இருப்பது. ஒன்று முதல் பரார்த்தம் ஈறுய் உள்ளது. அவற்றுள், ஒருமை நித்தப்பொருளைச் சேர்ந்தது நித்தம்; அநித்தப்; பொருளைச் சேர்ந்தது அநித்தம், இருமை முதலிய எல்லாம் யாண்டும் அநித்தமே.

(தீபிகை) சங்கை எஎ- து எண்ணின் இலக்கணம் கூறுகின்றது.

24. பரிமாணம் அளத்தல் வழக்கற்குச் சிறந்த காரணம். அது ஒன்பது பொருளினும் உள்ளது. அது நுண்மை பெருமை, குறுமை, நெடுமை என நான்கு வகைத்து.

(தீபிகை) பரிமாணம் எ- து அளவின் இலக்கணம் கூறுகின்றது,

அது எ - து பரிமாணத்தைப் பகுக்கின் றது.

25. வேற்றுமை வேறென்னும் வழக்கற்குச் சிறந்த காரணம். அது ஒன்பது பொருளினும் இருப்பது.

(தீபிகை) வேற்றுமை எ - து வேற்றுமையின் இலக்கணம் கூறுகின்றது. ‘இது இதனின் வேறு’ என்னும் வழக்கிற்குக் காரணம் என்றவாறு,

26. சையோகம் கூடியது என்னும் வழக்கற்குக் காரணம். அது ஒன்பது பொருளினும் இருப்பது.

(தீபிகை) சையோகம் எ - து கூட்டத்தின் இலக்கணம் கூறுகின்றது. ‘இவ்விரண்டும் கூடி நின்றன' என்னும் வழக்கிற்குக் காரணம் என்றவாறு, சையோகம் தொழிலால் தோன்றியதும் சையோகத்தால் தோன்றியதும் என இரு வகைத்து. கையின் தொழிலால் கைக்கும் புத்தகத்திற்கும் உளதாய சையோகம் தொழிலால் தோன்றியது. கைக்கும் புத்தகத்திற்கும் உளதாய சையோகத்தானே உடம்பிற்கும் புத்தகத்திற்கும் உளதாய சையோகம் சையோகத்தால் தோன்றியது. சையோகம் - வியாபியாமல் இருப்பது. வியாபியாமல் இருத்தல் தன் அத்தியந்தா பாவமும் தானும் ஓரிடத்திருத்தல்; ஏகதேசத்து இருப்பது என்றவாருயிற்று.

27. விபாகம் சையோகத்தை நாசம்பண்ணும் குணம். விபாகம் எனினும் பிரிவு எனினும் ஒக்கும். அது ஒன்பது பொருளினும் இருப்பது.

(தீபிகை) விபாகம் எ - து பிரிவின் இலக்கணம் கூறுகின்றது. காலம் முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்குக் ‘குணம்' என்றும், உருவம் முதலிய வற்றின் அதிவியாத்தி நீக்குதற்குச் ‘சையோகத்தை நாசம் பண்ணுவது’ என்றும் கூறப்பட்டது, விபாகமும் தொழிலால் தோன்றியதும், விபாகத்தால் தோன்றியது மென இருவகைத்து. கைக்கும் புத்தகத்திற்கும் உளாதாய பிரிவு தொழிலால் தோன் றியது, கைக்கும் புத்தகத்திற்கும் உளதாய பிரிவால் உடம்பிற்கும் புத்தகத்திற்கும் உளதாய பிரிவு விபாகத்தால் தோன்றியது.

28. பரத்துவம் முன்னென்னும் வழக்கிற்குச் சிறந்த காரணம். பரத்துவம் எனினும் முன்மை எனினும் ஒக்கும்.

(தீபிகை) பரத்துவம் எ - து முன்மையின் இலக்கணம் கூறுகின்றது.

29. அபரத்துவம் பின்னென்னும் வழக்கிற்குச் சிறந்த காரணம். அபரத்துவம் எனினும் பின்மை எனினும் ஒக்கும்.

(தீபிகை) அபரத்துவம் எ - து பின்மையின் இலக்கணம் கூறுகின்றது.

30. அவ்விரண்டும் திக்கனுல் பண்ணப்படுவளவும், காலத்தினுல் பண்ணப்படு வனவும் என இருவகைப்படும். அவற்றுள், திக்கினுல் பண்ணப்படும் பரத்துவம் சேய்மைக் கண் உள்ளது. திக்கினுல் பண்ணப்படும் அபரத்துவம் அண்மைக்கண் உள்ளது. காலத்தினுல் பண்ணப்படும் பரத்துவம் மூத்தோன்கணுள்ளது. காலத்தினுல் பண்ணப்படும் அபரத்துவம் இளையோன்கண் உள்ளது.

(தீபிகை) அவ்விரண்டும் எ - து அவற்றைப் பகுக்கின்றது.

திக்கனுல் பண்ணப்படும் எ - து திக்கனுல் பண்ணப்படுவனவற்றிற்கு உதாரணம் கூறுகின்றது.

காலத்தினுல் பண்ணப்படும் எது காலத்தினுல் பண்ணப்படுவனவற்றிற்கு உதாரணம் கூறுகின்றது.

31. குருத்துவம் ஆதியில் வீழ்ச்சிக்கு அசமவாயிகாரணம். குருத்துவம் எனினும் திண்மை எனினும் ஒக்கும். அது பிருதிவியினும் நீரினும் இருப்பது.

(தீபிகை) குருத்துவம் எ - து திண்மையின் இலக்கணம் கூறுகின்றது. இரண்டாம் வீழ்ச்சி முதலியவற்றிற்கு வேகம் அசமவாயிகாரணமாகலின், வேகத்தின் அதிவியாத்தி நீக்குதற்கு ‘ஆதி’ எனப்பட்டது.

32. திரவத்துவம் ஆதியில் ஓழகுவதற்கு அசமவாயி காரணம். திரவத்துவம் எனினும் நெதழ்ச்சி எனினும் ஒக்கும், அது பிருதிவி அப்புத் தேயுக்களில் இருப்பது. அது இயல்பாயுள்ளது, நிமித்தத்தாலுள்ளது என இருவகைத்து. நீரின் இயல்பாயு ள்ளது. பிருதிவி தேயுக்களின் நிமித்தத்தாலுள்ளது. பிருதிவியின் நெய் முதலிய வற்றின் நெருப்புக்கூடுதலால் உண்டாகிய நெகிழ்ச்சி. தேயுவில் பொன் முதலிய வற்றின் உண்டாவது.

(தீபிகை) திரவத்துவம் எ-து நெகிழ்ச்சியிலக்கணம் கூறுகின்றது. ஒழுகுதல்-பாய்தல்.

அது எ-து அவற்றைப்பகுக்கின்றது. தேயுவின் கூட்டத்தால் பிறந்தது நிமித்தத்தாலுண்டாயது; அதனின் வேறுயது இயல்பானுள்ளது என்க.

நெய்முதலியவற்றின் எ-து பிருதிவியின் நிமித்தத்தாஞயதற்கு உதாரணம்.

பொன் முதலியவற்றின் எ-து அதற்குத் தேயுவின் உதாரணம்.

33. சிநேகம் பொடி முதலியவற்றைத் திரட்டுவதற்கு ஏதுவாய குணம். நீரின் மாத்திரம் இருப்பது.

(தீபிகை) சிநேகம் எஎ-து சிநேகத்தின் இலக்கணம் கூறுகின்றது. காலம் முதலியவற்றின் அதிவியாத்து நீக்குதற்குக் 'குணம்' எனவும் உருவம் முதலிய வற்றின் அதிவியாத்தி நீக்குதற்குத் 'திரட்டுதல்' எனவும் கூறப்பட்டது.

34. சத்தம் செவியால் கவரப்படும் குணம். ஆகாயத்தின் மாத்திரம் இருப்பது. அது ஒலிவடிவும், எழுத்து வடிவும் என இருவகைத்து, அவற்றுள், ஒலி வடிவு பேரிகை முதலியவற்றில் தோன்றுவது. எழுத்து வடிவு வடமொழி முதலிய பாடை வடிவாய் உள்ளது. இது எல்லாவழக்திற்கும் காரணம்.

(தீபிகை) சத்தம் எ-து ஓசையிலக்கணம் கூறுகின்றது. ஓசைத்தன்மையின் அதிவியாத்தி நீக்குதற்குக் 'குணம்' என்றும், உருவம் முதலியவற்றின் அத வியாத்தி நீக்குதற்குச் 'செவியான்' என்றும் கூறப்பட்டது. ஓசை கூட்டத்தால் பிறந்ததும், பிரிவால் பிறந்ததும், ஓசையால் பிறந்ததும், என மூவகைத்து. அவற்றுள் முதலது முரசும் குணிலும் கூடிய கூட்டத்தில் பிறந்தது. இரண்டாவது மூங்கில் பிளவு படுங்கால் அவ்விரண்டின் பிரிவால் தோன்றுவதாய சடசட ஓசை. மூன்றுவது முரசு முதலியவிடம் தொடங்கிச் செவிகாறும் இரண்டாமோசை முதலிய ஓசையால் தோன்றுவது.

35. எல்லாவழக்கற்கும் காரணமான புத்தி அறிவு. அது நிஜனவும் அநுபவமும் என இருவகைத்து.

(தீபிகை) புத்தி எ-து புத்தியிலக்கணம் கூறுகின்றது. 'அறிகின்றேன்' எனப் பின்னிகழும் உணர்ச்சியால் குறிக்கப்படும் அறிவுத்தன்மையே இலக்கணம் என்பதாம்.

அது எ-து புத்தியைப் பகுக்கன்றது.

36. நிஜனவு வாசஜனயால் தோன்றும் ஞானம். அநுபவம் அதனின் வேறுய ஞானம். அது உண்மை யநுபவம், இன்மையநுபவம் என இருவகைத்து.

(தீபிகை) நிஜனவு எ-து நிஜனவின் இலக்கணம் கூறுகின்றது. பாவஜனயெனப் பெயரியவாசஜன என்க. வாசஜனயினது அழிவுபாட்டின் அதிவியாத்தி நீக்குதற்கு 'ஞானம்' என்றும், குடம் முதலியவற்றின் காட்டியுணர்வின் அதிவியாத்தி நீக்குதற்கு 'வாசனையால் தோன்றியது' என்றும் கூறப்பட்டது.

அநுபவம் எ-து அனுபவத்தின் இலக்கணம் கூறுகின்றது. நினைவிற்கு வேறுய உணர்வு அநுபவம் என்பதாம்.

அது எ - து அநுபவத்தைப் பகுக்கின்றது.

**37.** அஃது உடைப்பொருளின்கண் அது விசேடணமாக நிகழும் அனுபவம் உண்மையனுபவம். அதுவே பிரமை என்று உரைக்கப்படும். அஃது இல்பொருளின் கண் அது விசேடணமாக நிகழும் அனுபவம் இன்மையனுபவம். அது பிரமம்.

(தீபிகை) அஃது உடைப்பொருளின்கண் எ-து உண்மை யனுபவத்தின் இலக்கணம் கூறுன்றது. அற்றேல், 'குடத்தின்கண் குடத்தன்மை' என்னும் உணர்ச்சிக் கண் அவ்வியாத்திக்குற்றம் தங்கும், குடத்தன்மையின்கண் குடமின்மையாலெனின்: அற்றன்று; எதன்கண் எதன் சம்பந்தம் உண்டு அதன்கண் அதன் சம்பந்தத்தன் அனுபவமென்பது பொருளாகலின். குடத்தன்மையின்கண் குடசம்பந்தம் உண்மை யான், அவ்வியாத்தியின்மை உணர்க.

அது எ - து உண்மையனுபவமே பிரமை என நூலின் கண் கூறப்படுவது என்பதாம்.

அஃது இல்பொருளின்கண் எ - து இன்மையனுபவத்தின் இலக்கணம் கூறுகின்றது. அற்றேல் 'இது சையோக முடைத்து' என்னும் பிரமைக்கண் அதிவியாத்தி வருமாலோவெனின் - அற்றன்று; எதன்வரைவான் எதன்சம்பந்தம் இல்லை அதன்வரைவான் அதன் சம்பந்தவுணர்ச்சி இன்மையனுபவம் என்பது கருத்தாகலின். சையோகம் இன்மையான் வரைந்த சையோகவுணர்ச்சி மயக்கமாக லின், சையோகத்தான் வரைந்த சையோக சம்பந்த உணர்ச்சி உளதாகலின், அதி வியாத்தியின்மை உணர்க.

**38.** உண்மையனுபவம் காட்சி, அநுமிதி, உபமிதி, சாத்தம் என்னும் வேறு பாட்டால் நால்வகைத்து. அதன் கரணமும் காண்டல், அனுமானம், உவமானம், சத்தம் என்னும் வேறுபாட்டால் நான்குவகைத்து.

(தீபிகை) உண்மையனுபவம் எ- து உண்மையனுபவத்தைப் பகுக்கின்றது.

அதன் கரணமும் எ- து தொடர்பாட்டால் கரணத்தையும், பகுக்கின்றது.

அதன்கரணம் எ - து பிரமைக்குக் கரணம் என்றவாறு. பிரமைக்குக் கரணம் பீரமாணம் என்பது பிரமாணத்தின் பொதுவிலக்கணம். உண்மையனுபவ அறிவீற்குக் கருவியாயுள்ளது பீரமாணம் என்பது பொருள்

**39.** கரணமாவது சிறப்புக்காரணம்.

(தீபிகை) கரணமாவது எ - து சரணத்தின் இலக்கணம் கூறுகின்றது. சாதாரண காரணமாகிய காலம் திக்கு முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்குச் 'சிறப்புக் காரணம்' எனப்பட்டது.

40. காரணம் காரியத்துக்கு நியதமாய் முன்னிற்பது.

(தீபிகை) காரணம் எ - து காரணத்தின் இலக்கணம் கூறுகின்றது. கழுதை முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்கு 'முன்னிற்பது' என்றொழியாது 'நியதமாய்' என்றும், காரியத்தின் அதிவியாத்தி நீக்குதற்கு 'நியதமாய்' என்றெழியாது 'முன்னிற் பது' என்றும் கூறப்பட்டது. நியதம் - இன்றியமையாமை அற்றேல், நூலுருவமும் ஆடையைக்குறித்துக் காரணமாலோ எனின்:- அற்றன்று; பிறிதோராற்றால் பெறப் படாததாய் என்னும் அடை கொடுக்கற்பாற்றுகலின். பிறிதோராற்றுல் பெறப்படாமை - பிறிதோராற்றுல் பெறப்படுதலின்மை. பிறிதோராற்றுல் பெறப்படுதல் மூவகைத்து. எதனேடு கூடியே எதனைக் குறித்து முன்னிற்பதென்று உணரப்படுவது யாது அஃது அதனைக்குறித்து அதனுலே பிரிதோராற்றுல் பெறப்படுவது. அது நூலோடு கூடி நூலுருவமும் நூற்றன்மையும் ஆடையைக் குறித்து முன்னிற்பதென்று உணரப் படுவது ஒன்று. பிறிதொன்றனைக் குறித்து முன்னிற்றல் உணர்ந்துழி எடுத்துக் கொண்டதனைக் குறித்து முன்னிற்றல் உணரப்படுவது யாது :அஃது அவ்வெடுத்துக் கொண்டதலைக் குறித்துப் பிறிதோராற்றுல் பெறப்படுவது: அஃது ஆகாயம் ஓசையைக் குறித்து முன்னிற்றல் உணர்ந்துழிக் குடத்தைக் குறித்து ஆகாயம் முன்னிற்பது என்று உணரப்படுவது ஒன்று, மற்றவிடங்களிலே நியதமாய் முன்னிற்பது இது என்று துணியப்பட்டதனாற்றுனே காரியம் தோன்றுழி அதனேடு உடனிகழ்வது பிறிதோராற்றுல் பெறப்படுவது: அது பாகத்தால் தோன்றும் நிலத்து உருவத்தின் முன்னபாவம் நாற்றத்தைக் குறித்து முன்னிற்பது என்பது ஒன்று. ஆக மூன்றும் தெரிந்துகொள்க. இங்ஙனம் கூறியவாற்றுல் பிறிதோராற்றுல் பெறப்படாததாய் இன்றி யமையாது முன்னிற்பது காரணமெனக் கொள்க.

41. காரியம் முன்னின்மைக்கு எதிர்மறை.

(தீபிகை) காரியம் எ-து காரியத்தின் இலக்கணம் கூறுகின்றது.

42. அக்காரணம் சமவாயி, அசமவாயி, நிமித்தம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்து, எதன்கண் ஒற்றித்துக் காரியம் தோன்றும் அது சமவாயிகாரணம்: அஃது எங்ஙனம்; நூல்கள் ஆடைக்குச் சமவாயிகாரணம். ஆடையும் தன்னையடைந்த உருவம் முதலியவற்றிற்குச் சமவாயிகாரணம் *காரியத்துடனுகத்தான் காரணத் துடனுகத் தான் ஒரு பொருளில் சமவேதித்துக் காரணமாய் இருப்பது, அசமவாயி காரணம்: அஃது எங்ஙனம், நூலியைபு ஆடைக்கு, நூலுருவம் ஆடையுருவிற்கு, அசமவாயிகாரணம். அவ்விரண்டின் வேறுய காரணம் நிமித்தகாரணம்: அஃது எங்ஙனம், ஆடைக்கு நாடாவேமா முதலியன. இங்ஙனம் கூறிய மூவகைக் காரணத்துள் யாது சிறந்தகாரணம் அதுவே கரணம்.

(தீபிகை) அக்காரணம் எ-து காரணத்தைப் பகுக்கின்றது.

எதன்கண் எ-து சமவாயிகாரணத்தின் இலக்கணம் கூறுகின்றது.

காரியத்துடன் எ-து அசமவாயிகாரணத்தின் இலக்கணம் கூறுகின்றது.

நூலியைபு எ-து 'காரியத்துடன்' என்பதற்கு உதாரணம் கூறுகின்றது. தன்காரியமாயெ ஆடையோடும் ஒரு நூலின் கண் சமவேதித்திருத்தலான், நூலியைபு ஆடைக்கு அசமவாமி காரணம் என்றவாறு.

நூலுருவம் எ-து 'காரணத்துடன்' என்பதற்கு உதாரணம் கூறுகின்றது. தன்காரியத்தின் சமவாயிகாரணமாகிய ஆடையுடன் ஒருநூலின்கண் சமவேதித்தி ருத்தலான், நூலுருவம் ஆடையுருவிற்கு அசமவாயிகாரணம் என்றவாறு.

அவ்விரண்டின் எ-து நிமித்தகாரணத்தின் இலக்கணம் கூறுகின்றது. சமவாயி காரணம், அசமவாயி காரணமாகிய இரண்டின் வேறுகிய காரணம் என்றவாறு.

இங்ஙனம் கூறிய எ-து கரணத்தின் இலக்கணம் முடிந்தது முடித்தல் என்னுமுத்தியால் கூறுகின்றது.

---

* கரரியத்துடனுகத்தான், காரணத்துடனுகத்தான என்பதற்குக் 'காரியத்துடனேனும் காரணத்துடனேனும்' எனப்பொருள் கொள்க.

---

## பிரத்தியக்ஷப்பிரமாணம்

43. அக்கரணம் நான்கனுள், காண்டலாவது பலப்படக் காணும் காட்யெறிவிற்கு க் கரணம். காட்சி யறிவு இந்திரிய விடய சம்பந்தத்தால் தோன்றும் ஞானம். அது நிருவிகற்பகம் சவிகற்பகம் என இருவகைத்து. அவற்றுள், நிருவிகற்பகம் விசேடணமின்றித் தோன்றும் ஞானம். சவிகற்பகம் 'இவன் சாத்தன்' 'இவன் கரியன்' 'இவன் பார்ப்பான்' என விசேடணத்தோடு தோன்றும் ஞானம்.

(தீபிகை) அக்கரணம் நான்கனுள் எ-து காண்டலளவையின் இலக்கணம் கூறுகின்றது.

காட்சியறிவு எ-து காட்சியறிவின் இலக்கணம் கூறுகின்றது. இந்திரியம் கண் முதலியன. விடயம் குடம் முதலியன. அவ்விரன்டன் சம்பந்தம் சையோகம் முதலியன அச்சையோகமுதலியவற்றால் பிறந்தவுணர்வு என்பதாம்.

அவற்றுள், நிருவிகற்பகம் எ-து நிருவிகற்பக் காட்சியிலக்கணம் கூறுகின்றது. விசேடண விசேடியங்களின் சம்பந்தம் கவராதவுணர்வு என்றவாறு. அற்றேல், நிருவிகற்பகம் உண்டு என்பதற்குப்பிரமாணம் என்னையெனின்:- 'ஆத்தன்மை யான்

அடையடுத்த ஆவென்னும் விசேடியஞானம் விசேடண ஞானத்தால் தோன்றற் பாலது, விசேடியஞானமாகலின், குழையனென்னும் ஞானம்போலும்' என்னும் அனுமானமே பிரமாணம் என்க. விசேடணஞானமும் சவிகற்பகம் எனின் வரம்பின்றி யோடும் ஆகலின், நிருவிகற்பகம் உண்டென்பது பெறுதும்.

சவிகற்பகம் எ-து சவிகற்பகத்தின் இலக்கணம் கூறுகின்றது. பெயர் சாதி முதலிய விசேடண வீசேடியங்களின் சம்பந்தம் கவருஞானம் என்பதாம், 'இவன் சாத்தன்' 'இவன் கரியன்' என்றது சவிகற்பகத்துக்கு உதாரணம்.

44. காண்டலறிலிற்கு ஏது இந்திரிய விடயசம்பந்தம். சம்பந்தம் எனினும், இயையு எனினும், யாப்பு எனினும். கிழமை எனினும் ஒக்கும். அச்சம்பந்தம் சையோகமும், சையுத்தசமவாயமும், சையுத்தசமவேத சமவாயமும், சமவாயமும், சமவேத சமவாயமும், விசேடண விசேடியத்தன்மையும் என அறுவகைப்படும். கண்ணிஞல் குடத்தைக் காணுங்கால் சையோக சம்பந்தம். குடவுருவத்தைக் காணுங்கால் சையுத்த சமவாயம்; கண்ணோடு சையுத்தமான குடத்தில் உருவம் [1]சமவாயமாதலான் என்க. உருவத்தன்மைப் பொதுமையைக் காணுங்கால் சையுத்த சமவேத சமவாயம், கண்ணோடு சையுத்தமான குடத்திலுருவம் சமவேதம், உருவத்தில் உருவத்தன்மை [2]சமவாயமாதலால் என்க. செவியால் சத்தத்தை யுணருங்கால் சமவாயசம்பந்கம், செவித்துளேயிலிருக்கும் ஆகாயமே சோத்திரமா தலால் சத்தம் ஆகாய குணமாதலின் குண குணிகட்குச் சமவாயம் உண்மையான் எனவுணர்க. ஓசைத்தன்மையை உணருங்கால் சமவேத சமவாயம், சோத்திரத்தில் சமவேதமான சத்தத்தில் [3]சத்தத்தன்மை சமவாயமாய் இருத்தலான் என்க. அபாவத் தைக் காணுங்கால் விசேடண விசேடியத்தன்மைச் சம்பந்தம். 'குடமில்லது இப்பூதலம்' என்புழிக் கண்ணோடு சையுத்தமான பூதலத்தில் குடமின்மை விசேடண மாயும் 'பூதலத்தில் குட.மில்லை' என்புழிக் குடமின்மை விசேடியமாயும் இருத்தலான் என்க. இங்ஙனம் கூறிய ஆறு சம்பந்தத்தினும் தோன்றும் உணர்வு காட்சி. அதற்குக் கரணம் இந்திரியம். அதனுல் இந்திரியமே காண்டலளவை என்பது பெறப்பட்டது.

(தீபீகை) அச்சம்பந்தம் எ - து இந்திரிய வீடய சம்பந்தத்தைப் பகுக்கின்றது,

கண்ணிஞல் எ - து சையோக சம்பந்தத்திற்கு உதாரணம் கூறுகின்றது, திரலியக்காட்சியில் யாண்டும் சையோகமே சம்பந்தம் என்பதாம். ஆன்மா மனத்தோ டும். மனம் இந்திரியத்தோடும், இந்திரியம் பொருளோடும் கூடும்; அதனுல் காட்சி யுணர்வு நிகழும் எனவுணர்க.

குடவுருவத்தை எ - து சையுத்தசமவாயத்திற்கு உதாரணம் கூறுகின்றது.

கண்ணோடு எ - து அதற்கு ஏதுக் கூறுகின்றது.

உருவத்தன்மைப் பொதுமையை எ - து சையுத்த சமவேத சமவாயத்திற்கு உதாரணம் கூறுகின்றது.

[1],[2], சமவாயமுண்மையால்' [3]. 'சத்தத்தன்மைக்குச் சமவாயமுண்மையால்' எனப் பாடம் கொள்க.

செவியால் எ- து சமயவாயத்திற்கு உதாரணம் கூறுகின்றது.

செவித்துளையில் எ- து அதனைத் தெரித்து உணர்த்துகின்றது, அற்றேல், சேய்மைக் கண்ணதாகிய ஓசை செவியின்கண் சம்பந்திப்பது எவ்வாறு எனின்:- வீசிதரங்க நியாயத்தாற்றுன் கதம்பமுகுள நியாயத்தாற்றுன் வெவ்வேறு ஓசையைத் தோற்றுவிக்கும் முறையானே செவிப் புலத்தன்கண் தோன்றிய ஓசைக்குச் செவிச் சம்பந்தம் உண்மையால் காட்சியுணர்வு நிகழும் என்க.

ஓசைத்தன்மையை எ- து சம்வேத சமவாயத்திற்கு உதாரணம் கூறுகின்றது.

அபாவத்தை எ - து விசேடண விசேடியத்தன்மைக்கு உதாரணம் கூறுகின்றது.

குடமில்லது எ - து அதனைத் தெரிந்து உணர்த்துகின்றது, இதனுனே அனுபலத்தி வேறு பிரமாணம் என்பதூஉம் மறுக்கப்பட்டது, 'ஈண்டுக் குடம் உண்டா யின் இப்பொழுது நிலம் போலக் காணப்பட வேண்டும், காட்டு இன்மையான் இல்லை' என்று தர்க்கம் செய்யப்படும் எதிர்மறைப்பொருளின் உண்மையின் உணர்வு பெறுமையோடு கூடிய இந்திரியத்தானே அபாவவுணர்வு தோன்றுதலின், அனுபலத்தி வேறு பிரமாணம் என்றல் பொருந்தாமை உணர்க; இடம் உணர்தற் பொருட்டு வேண்டப்படும் இந்திரிய கரணமாயவழி அனுபலத்தி கரண மென்றல் பொருந்தாமையின். விசேடண விசேடியத்தன்மை விசேடண விசேடிய சொரூபமே அன்றி வேற்றுச்சம்பந்தம் அன்று.

இங்ஙனம் எ-து காட்சியுணர்வு முடிந்தது முடித்தலென்னும் உத்தியாற்கூறி, அதற்குக் கருவி கூறுகின்றது. சிறப்புக்காரணமாகலின், இந்திரியம் காட்சியுணர்விற் குக்கருவி என்றவாறு,

அதனுல் எது காண்டலளவை முடிந்தது முடித்தலென்னும் உத்தியால் கூறுகின்றது.

## அனுமானப்பிரமரணம்

**45.** இனி அனுமானமாவது அனுமிதிக்குக் கரணம். அனுமிதி ஆராய்ச்சியாற் றேன்றும் ஞானம். ஆராய்ச்சி வீயாத்தயடுத்த பக்க தருமத்தன்மை ஞானம்: அது 'வன்னியின் வியாப்பியமான புகையுடையது இம்மலை' என்னும் ஞானம். அவ் ஆராய்ச்சியால் தோன்றியது 'இம்மலை தீயுடைத்து' என்னும் உணர்வு. அதுவே அனுமிதி என்க. வியாத்தி 'யாண்டுப் புகை ஆண்டுத் தீ' என நியதமான உடனிகழ்ச்சி, பக்கதருமத்தன்மை வியாப்பியமான புகைமலை முதலிய பக்கத்தினிருத்தல்.

(தீபிகை) இனி அனுமானம் எ-து அனுமான இலக்கணம் கூறுகின்றது.

அனுமிதி எ-து அனுமிதி இலக்கணம் கூறுகின்றது. அற்றேல், ‘குற்றியோ மகனோ’ என்னும் ஐயத்தின் பின்னர் ‘மகன்மையான் வியாபிக்கப்படும் கை கால் முதலியன உடையன் இவன்’ என்னும் ஆராய்ச்சியான் ‘மகனே’ என்னும் காட்சி யுணர்வு பயத்தலின் ஆண்டு அனுமியுணர்வே பயப்பது எனின், ‘மகனைப் புலப்படக் காண்டுன்றேன்’ எனப் பின்னிகழும் உணர்விற்கு மாறுகோடலின், அதன் ‘ஆராய்ச்சியால் தோன்றும் ஞானம்' என்னும் இலக்கணத்திற்கு ஐயத்தின் பின்னர்த்தாகிய காட்சிக் கண் அதிவியாத்தி வருமாலோ எனின்:- அற்றன்று; பக்கத் தன்மையோடு கூடிய ஆராய்ச்சியால் தோன்றும் ஞானம் என்பது கருத்தாகலின். பக்கத்தன்மையாவது துணிதல் வேட்கை இல்லாமையோடு கூடிய துணிபொருட் பெறுதியின்மை. துணிபொருட்பெறுதி அனுமிதியுணர்விற்குத் தடை, துணிதல் வேட்கை அதற்கு மாற்று, பெறுதியுள்ள வழியும் ‘அனுமிப்பேன்' என்னும் வேட்கை யான் அனுமிதியுணர்வு நிகழக்காண்டலின் நெருப்பின் சூட்டைத் தடுப்பது மணி, அதற்கு மாற்று மந்திரமாதல் போலும் என்க. எனவே, மாற்றின்மையோடு கூடிய மணியினபாவம் சுடுதல்காரணமாதல்போலத் துணியும் விருப்பமில்லாமையோடு கூடிய பெறுதியின்மையும் அனுமிதியுணர்விற்கக் காரணமாதல் பெறப்பட்டது.

ஆராய்ச்சி எ-து ஆராய்ச்சியிலக்கணம் கூறுகின்றது. வியாத்தயை விடயமாக வுடைய பக்கதருமத்தன்மை ஞானம் யாது அது ஆராய்ச்சி என்பதாம்.

அது எ-து ஆராய்ச்சியைத் தெரித்துக்காட்டியவாறு.

அவ்வாராய்ச்யோல் எ-து அனுமிதியுணர்வினைத்தெரித்துக் கட்டியவாறு,

வியாத்தி எ - து வியாத்தி இலக்கணம் கூறுகின்றது.

யாண்டுப்புகை எ - து வியாத்தியைத் தெரித்துக் காட்டியவாறு.

நியதமான உடன் நிகழ்ச்சி எ - து இலக்கணம். உடனிகழ்ச்சி - ஒரு நிலைக்களத்தருத்தல். அது நியதமாதல் ஏதுவின் நிலைக்களத்து உளதாகிய முழுதும் அபாவத்திற்கு எதிர்மறையாகாத துணிபொருளின் நிலைக்களத்து உளதாதல். அதுவே வியாத்தி என்பதாம்.

பக்கதருமம் எ-து பக்கதருமத்தன்மை இன்னது என்கின்றது.

**46.** இவ்வனுமானம் தன் பொருட்டு அனுமானம், பிறர் பொருட்டு அனுமானம் என இருவகைத்து.

(தீபிகை) இவ்வனுமானம் எ-து அனுமானத்தைப் பகுக்கின்றது.

**47.** தன்பொருட்டனுமானம் தனக்கு அனுமிதி ஞானம் விளங்குதற்குக் காரணம். அங்ஙனமன்றே, ஒருவன் தானே அடுத்தடுத்துக் காண்டலால் 'யாண்டுப் புகை ஆண்டுத் தீயுண்டு' என அடுக்கஜள முதலியவற்றின் அவ்விரண்டற்கும் வியாத்தியை உணர்ந்து, மஜலயின் அண்மைக்கண் சென்றுன்; ஆண்டுச்சென்றுழி 'இம்மஜலயில் தீ உண்டோ இல்ஜலயோ' என ஐயுற்றுன்; அம்மஜலயின் மேல் புகையைக் கண்டுழி 'யாண்டுப் புகை ஆண்டுத் தீ என்னும் வியாத்தி நிஜனவு நிகழும். அந்நிஜனவு நிகழ்ந்த பின்னர், 'வன்னியின் வியாப்பியமான புகையுடையது இம்மஜல" என்னும் உணர்வுதோன்றும்; அதுவே இலிங்கபராமரிசம் எனப்படும். அதனுல் 'இம்மஜல நெருப்புடைத்து' என்னும் அனுமிதி ஞானம்தோன்றும் இது தன்பொருட்டு அனுமானம் என் கட இலிங்கபராமரிசம் எனினும் குறியாராய்ச்சி எனினும் ஒக்கும்.

(தீபிகை) ஒருவன் எ - து தன் பொருட்டனுமானத்தைத் தெரித்துக் காட்டு கின்றது. அற்றேல், 'யாண்டுப் பிருதிவியின் கூறுந்தன்மை ஆண்டு இரும்பால் போழற் பாலதாந்தன்மை என்றற்றுெடக்கத்து உடனிகழ்ச்ர பலகால் கண்டுழியும் வயிரமணி முதலியவற்றில் பிறழக்காண்டலின், அடுத்தடுத்துக் காண்டலால் வியாத்து கவர்தல் யாண்டையது எனின்:- அற்றன்று; பிறழ்ச்சி உணர்வின்மையோடு கூடிய உடனிகழ்ச்ியுணர்வே வியாத்தியைத் தெவிப்பதாகலின், பிறழ்ச்சி யுணர்வு துணிவும் ஐயமும் என இருவகைத்து. அவற்றுள், துணிவு இயல்பானே தெரிந்து நீக்கப்படும். ஐயப்பிறழ்ச்சி தருக்கத்தால் தெரிந்து நீக்கப்படும். புகை தீக்களின் வியாத்தி யுணர்தற்கண் பிறழ்ச்சி ஐயப்பாடு நீக்குவது காரியகாரணத் தன்மைக்குக் கேடு வரும் என்னும் தருக்கமாம் என்க.

அற்றேல், உலகத்துள்ள எல்லாப் புகைதீக்களும் காட்சிப்படாமையின் வியாத்தியுணர்ச்சி யாண்டையது எனின்: அற்றன்று; புகைத்தன்மை தீத்தன்மை யாகிய அவற்றின் பொதுமைச்சாதி உணரப்படுதலின் எல்லாப் புகைதீக்களின் உணர்வும் நிகழுமாகலின் என்க.

அதனுல் எ - து இலிங்கபராமரிசத்தான் என்றவாறு.

**48.** பிறர்பொருட்டு அனுமானமாவது தான் புகையால் வன்னியை அனுமித்து, பிறர் உணர்தற்பொருட்டு ஐவகை உறுப்புக்கஜளயுடைய வாக்கியத்தைக் கூறுவது. வாக்கியம் எனினும் தொடர்மொழி எனினும் ஒக்கும். அது 'மஜல தீ உடைத்து. புகை உடைமையால், யாது யாது புகையுடைத்து அது அது தீ யுடைத்து அடுக்கஜளபோல, இதுவும் அங்ஙனம், ஆதலின் இங்ஙனம் எனவரும். இதனுல் கூறப்பட்ட இலிங்கத்தால் பிறரும் யுண்டு எனத் தெளிவர்.

(தீபிகை) பிறர் பொருட்டனுமானம் எ-து பிறர் பொருட்டனுமானம் கூறுகின்றது.

அது எ- து ஐவகை உறுப்புக்கஜளயுடைய வாக்கியத்திற்கு உதாரணம் கூறுகின்றது.

**49.** ஐவகை உறுப்புக்களாவன பிரதஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமனம் என இவை, பிரதிஞ்ஞை; மேற்கோள் என்பன ஒருபொருட் கிளவி. இதனுள் 'மஜல தீ உடைத்து' என்பது பிரதிஞ்ஞை: 'புகையுடைமையால்' என்பது எது. யாது யாது புகையுடைத்து அது அது தீயுடைத்து அடுக்கஊளபோல' என்பது உதாரணம்; 'இதுவும் அங்ஙனம்' என்பது உபநயம்; 'ஆதலின் இங்ஙனம்' என்பது நிகமனம் என உணர்க.

(தீபீகை) ஐவகை எ - து ஐவகை உறுப்புக்களின் பெயர் கூறுகின்றது.

இதனுள் எ-து எடுத்துக்காட்டிய வாக்கியத்தின் மேற் கோள் முதலிய ஐந்தி ஊயும் பகுத்துக் காட்டுகின்றது. பக்கத்தைத் துணிபொருளுடைத்தாகக் கூறுகின்றது. மேற்கோள், இன், ஆன் என்னும் உருபு ஈருக இலிங்கத்தை எடுத்துக் காட்டுவது ஏது. வியாத்தியை எடுத்துக் காட்டுவது உதாரணம். பக்க தருமத்தன்மை உணர்தற்பொரு ட்டுத் திருட்டாந்தத்தைச் சார்த்திக் கூறுவது உபநயம், முடிந்தது முடித்தல் நிகமனம். மறுதஜலயின்மை காட்டல் முதலியன நிகமனத்திற்குப் பயன் என்க.

**50.** தன்பொருட்டனுமிதி பிறர்பொருட்டனுமிது என்னும் இவை இரண்டற்கும் இலிங்க ஆராய்ச்சியே கருவி. அதனுல் இலிங்கப்பராமரிசம் அனுமானம் எனப்பட்டது.

(தீபிகை) தன்பொருட்டனுமிதி எ - து அனுமிதியுணர்விற்குக் காரணம் கூறுகின்றது, அற்றேல், வியாத்திநிஊனவும் பக்கதருமத்தன்மை உணர்வுமே அனுமிதியைப் பீறப்பித்தலினடையடுத்த ஆராய்ச்சி வேண்டற்பாலது எற்றுக்கு எனின்:- அற்றன்று! 'வன்னியின் வியாப்பியமான புகையுடைத்து இது' என்னும் சத்தபரர்மரிசத்தன்கண் ஆராய்ச்சி ஒருதஜலயான் வேண்டற்பாலதாகலின் எளிதாக யாண்டும் ஆராய்ச்சியே காரணம் என்றல் பொருத்தமுடைத்து ஆகலின்.

இலிங்கமே கரணமாம் பிறவெனின்:- இறந்தது முதலியவற்றில் பிறழ்தலான் ஆகாதென்க. வியாபாரம் உடைத்தாகிய காரணமே கரணம் என்பார் மதத்தின் ஆராய்ச்சி வழியான் வியாத்தியுணர்வு கரணமெனக் காண்க; வியாபாரம் அதனில் தோன்றி அதனில் தோன்றற்பாலதஊனத் தோற்றுவிப்பது.

அதனுல் எ-து அனுமானத்தை முடிந்தது முடித்தல் என்னும் உத்தியால் கூறுகின்றது.

**51.** இலிங்கம் அந்நுவயவெதிரேகி, கேவலாந்நுவயி, கேவலவெதிரேகி என மூவகைத்து. அந்நுவயம் உடம்பாடு. வெதிரேகம் மறை,

(தீபிகை) இலிங்கம் எ-து இலிங்கத்தைப் பகுக்கின்றது.

52. அந்நுவயத்தானும் வெதிரேகத்தானும் வியாத்தியுடையது அந்நுவயவெட திரேதி. வன்னியைச் சாதிக்குங்கால் புகையுடைமை அந்நுவவெதிரேகி. 'யாண்டுப்புகை ஆண்டுத் தீ அடுக்கஊபோல்' என அந்நுவய வியாத்தியும், 'யாண்டுந் தீயில்ஊல ஆண்டுப் புகையில்ஊல மடுப்போல' என வெதரே கவி யாத்தியும் உடைமை யின்.

(தீபிகை) அந்நுவயத்தானும் எ-து அந்நுவய வெதிரேகியைத் தெரித்து உணர்த் துகின்றது. ஏதுவிற்கும் துணி பொருட்கும் உளதாய வியாத்து அந்நுவயவியாத்தி, அவ்விரண்டன் அபாவங்கட்கு உளதாய வியாத்தி வெதிரேகவியாத்தி என்றறிக.

53. இனி அந்நுவயத்தின் மாத்திரம் வியாத்தியுடையது கேவலாந்நுவயி; அஃது எங்ஙனம். 'குடம் அபிதேயம்: பிரமேயத்தன்மையால், ஆடைபோல' எனவரும். ஈண்டுப் பிரமேயத்தன்மை அபிதேயத்தன்மைகட்கு வெதிரேக வியாத்தியின்று; எல்லாப் பொருளும் பிரமேயமும் அபிதேயமும் ஆதலால். பிரமேயம் அளவையால் அளக்கற்பாலது அபிதேயம் பெயரிட்டு வழங்கற்பாலது.

(தீபிகை) இனி அந்நுவயத்தன் எ-து கேவலாந்நுவயி இலக்கணம் கூறுகின்றது. கேவலாந்நுவயியாகய துணி பொருட்கு இலிங்கம் கேவலாந்நுவயி, முழுதும் அபாவத்திற்கு எதிர்மறையாகாமை கேவலாந்நுவயித்தன்மை, இறைவனுணர்விற்கு விடயமாந்தன்மையும் எல்லாம் என்னும் மொழி யான் வழங்கற்பாலதாந்தன்மை யும் யாண்டும் உண்மையின் அவற்றிற்கு வெதிரேகமின்மை உணர்க.

54. இனிக் கேவலவெதிரேகி வெதரேகத்தின் மாத்திரம் வியாத்தியுடையது: அஃது எங்ஙனம். 'பிருதிவி ஏஊனயவற்றின் வேறு, நாற்றமுடைமையின்; யாது ஏஊனப் பொருள்களின் வேறன்று அது நாற்றம் உடைத்தன்று அப்புப்போல, இஃது இங்ஙனம் அன்று ஆதலின் இங்ஙனம் அன்று' என வரும். ஈண்டு 'யாது நாற்றமுடைத்து அது ஏஊனப் பொருள்களின் வேறு இதுபோல' என அந்நுவயத்தில் திருட்டாந்தமில்ஊல, பிருதிவி முழுதும் பக்கமேயாகலின்.

(தீபிகை) இனிக் கேவலவெதிரேகி எ - து கேவலவெதி ரேகி இலக்கணம் கூறகின்றது.

பிருதிவி எ - து அதற்கு உதாரணம் கூறுகின்றது, அற்றேல், ஏஊனயவற்றிள் வேறுதல் முன்னர்த் துணியப்பட்டதோ அன்றே? துணியப்பட்டது எனின் யாண்டுத் துணியப்பட்டது ஆண்டு ஏதுவுண்டாயின் அந்நுவயமுடையத்தாதல் கூடும்; ஆண்டு ஏதுவின்றுயின் சிறப்பென்னும் அநைகாந்நிகமாம்; அன்றெனின், துணிபொருளு ணர்ச்சி இன்மையின் அதனுன் விசேடிக்கப்படும் அனுமிதியுணர்வு எங்ஙனம் தோன்றும், விசேடவுணர்ச்சி இன்றி விசேடிக்கப்பட்டதனுணர்வு பிறவாமையின்.

அன்றியும், எதிர்மறையுணர்ச் இன்மையின் வெதிரேக வியாத்தியுணர்வும் உண்டாகாதாலோ எனின்:- அற்றன்று:- அப்பு முதலிய பதின்மூன்றன் கண்ணும்

ஒன்றற்கொன்று வேறுந்தன்மை உளவாம் அன்றே, அப்பதின்மூன்றன்கண்ணும் தனித்தனி துணியப்பட்டட வேறுதற்றன்மை பின்னர் பிருதிவியின்கண் ஒருங்கு துணியப்படும் ஆகலின் என்க, பதின்மூன்றன் தன்மையானும் வரைந்துகொள்ளப் பட்ட வேறுதற்றன்மை ஒருநிலைக்களத்து இராமையின், அந்நுவயமுடைத்தாகாமை யும் சிறப்பு அறைகரந்திகமின்மையும் உணர்க. தனித்தனி நிலைக்களத்து முன்னர் துணியப்பட்டதாகலின், துணிபொருள் விசேடணத்தான் அடுத்த அனுமிதியுணர்வும் கூடும், வெதிரேகவியாத்தியும் உண்டு என்க.

55. பக்கம் ஐயுற்றுத் துணியும்பொருளுக்கு இடம்:- அஃது எங்ஙனம், புகையுடைமையாகிய ஏதுவில் மலைபக்கம். சபக்கம் துணிந்த பொருளுக்கு இடம்: அஃது எங்ஙனம், அவ்வேதுவில் அடுக்களை, துணிந்தபொருள் இல்லாவிடம் விபக்கம்; அஃது எங்ஙனம், ஆண்டு மடு.

(தீபிகை) பக்கம் எ-து பக்கத்தின் இலக்கணம் கூறுகின்றது. அற்றேல், வேத வாக்கயங்களான் ஆன்மா உண்டு என்பது துணியப்பட்டதாகலின், ஆண்டு ஐயமின் மையின் கேள்வியின் பின்னர்த்தாகிய சிந்தனைக்கண்ணும், காட்சிப் புலனாகிய நெருப்பின் கண் துணிதல் வேட்கை உளதாயவழி அனுமிதி யுணர்வு பிறத்தலின் ஆண்டும், அவ்வியாத்து வருமாலோ எனின்:- அற்றன்று; முன்னர்க்கூறிய பக்கத்தன் மைக்குப் பற்றுக்கோடாதல் பக்கத்துக்கு இலக்கணமாகலின்.

சபக்கம். எ-து சபக்கத்தன் இலக்கணம் கூறுகின்றது.

துணிந்த 'எ-து விபக்கத்இன் இலக்கணம் கூறுகின்றது.

56. இனி ஏதுப்போலி சவ்வியபிசாரம், விருத்தம், சற்பிரதிபக்கம். அசித்தம், பாதிதம் என ஐவகைத்து.

(தீபிகை) இனி ஏதுப்போலி எ-து இங்ஙனம் உண்மை ஏதுவைத் தெரித்துணர் த்தி, ஈண்டு இன்மை யேதுவைத் தெரித்துக் காட்டும் பொருட்டுப் பகுக்கின்றது. அநுமிதி யுணர்விற்குத் தடையாய் உண்மை அனுபவ உணர்வினை விடயமாகக் கோடல் ஏதுப்போலி இலக்கணம்.

57. அவற்றுள், சவ்வியபிசாரம் அநைகாந்திகம், பிறழ்ச்சி யுடையது, அது பொதுவும், சிறப்பும். முடிவு பெறுமையும் என மூவகைத்து,

(தீபிகை) அவற்றுள் எ-து அறைகாந்திகத்தின் இலக்கணம் கூறுகின்றது.
அது எ-து அநைகாந்திகத்தைப் பகுக்கின்றது.

58. அவற்றுள். பொது அரைகாந்திக ஏதுப்போலி துணிபொருளில்லாவிடத்தும் இருக்கும் ஏது: அது ‘இம்மலை தீயுடைத்து, அளவையான் அளக்கற் பாலதாகலின்’

என்பதாம். அளவையான் அளக்கற் பாலதாந்தன்மை தீயில்லா இடமாகிய நீர்த்தடாகத்தினும் இருத்தலின் என்க.

(தீபிகை) அவற்றுள், பொது எ-து பொது அநைகாந்திகத்தின் இலக்கணம் கூறுகின்றது,

அது எ-து அதற்கு உதாரணம் கூறுகின்றது.

59. சிறப்பு அநைகாந்திகம் சபக்க விபக்கங்கள் எல்லாவற்றினும் இல்லாதது: அது 'சத்தம் நித்தியம், சத்தத்தன்மை யுடைமையான்' என்பது. சத்தத்தன்மை நித்த அநித்தப் பொருள் எல்லாவற்றினும் இன்றிச் சத்தத்தின்மாத்திரம் இருப்பது,

(தீபிகை ) சிறப்பு எ-து சிறப்பு அறைகாந்திகத்தின் இலக்கணம் கூறுகின்றது.

**60.** முடிவுபெறுமை அந்நுவய திருட்டாந்தமும் வெதிரேகதிருட்டாந்தமும் இல்லாதது: அது 'எல்லாப் பொருளும் அநித்தம், அளவையான் அளக்கற்பாலதாக லின்' என்பது ஈண்டு முழுவதும் பக்கமாயிருத்தலின், இருட்டாந்தம் இல்லை.

(தீபிகை) முடிவுபெறுமை எ-து முடிவுபெறுமை அநைகாந்திகத்தின் இலக்க ணம் கூறுகின்றது.

**61.** இனித் துணிபொருள் இல்லாவிடத்து வியாபித்திருக்கும் ஏது விருத்தமெ ன்னும் ஏதுப்போலி: அது 'சத்தம் நித்தியம், காரியப்பாட்டால்' எனவரும், காரியப்பாடு நித்தியமல்லா அழிபொருளில் வியாபித்திருப்பதாகலின் என்க.

(தீபிகை) இனித் துணிபொருள் எ-து விருத்தத்தின் இலக்கணம் கூறுகின்றது.

**62.** துணிபொருட்கு மறுதலையாகிய துணிந்த பொருளைச் சாதிக்கும் வேறோர் ஏதுவினையுடைய ஏது சற்பிரதிபக்கம் என்னும் ஏதுப்போலி: அது 'சத்தம் நித்தியம், செவிக்குப் புலனாதலின், சத்தத்தன்மை போலும்' 'சத்தம் அநித்தியம்' காரியப்பாட் டால், 'குடம்போலும்' எனவரும்.

(தீபிகை) துணிபொருட்கு எ-து சற்பிரதிபக்க இலக்கணம் கூறுகின்றது.

**63.** இனி அசித்தம் என்னும் ஏதுப்போலி சார்பசித்தம், உருவசித்தம், வியாப்பி யத்தன்மைசித்தம் என மூவகைப்படும்.

(தீபிகை) இனி அசித்தம் என்னும் எ-து அசித்தத்தைப் பகுக்கின்றது.

**64.** அவற்றுள், சார்பசித்தமாவது ‘ஆகாயத்தாமரை மணமுடைத்து, தாமரைத் தன்மையால், பொய்கைத் தாமரை போலும்’ என வரும். ஈண்டு மணமுடைமைக்கு ஆகாயத்தாமரை சார்பு, அதுவே இல்லை.

(தீபிகை) அவற்றுள், சார்பு எ-து சார்பசித்தத்திற்கு உதாரணம் கூறுகின்றது.

**65.** உருவசித்தமாவது சொரூபாசித்தம்: அஃது எங்ஙனம் ‘சத்தம் குணம், கண்ணுக்குப் புலனாதலின்’ எனவரும். ஈண்டுக் கட்புலனாதல் சத்தத்திற்கு இன்று, சத்தம் செவிக்குப் புலனாதலின்.

(தீபிகை) உருவடுத்தம் எ-து உருவடத்தத்திற்கு உதாரணம் கூறுகின்றது,

**66.** வியாப்பியத்தன்மைய சித்தமாவது செயற்கையோடு கூடிய ஏது. செயற்கை சாத்தியத்தில் வியாபித்து ஏதுவில் வியாபியாதது. சாத்தியத்தில் வியாபித்தல் சாத்தியப் பொருள் இருக்கும் இடத்தின்கண் உள்ள முழுதுமபாவத்திற்கு எதிர்மறையாகாமை. ஏதுலில் வியாபியாமை ஏது இருக்கும் இடத்தின்கண் உள்ள முழுதுமபாவத்திற்கு எதிர்மறையாதல். ‘இம்மலை புகை உடைத்து, தீ உடைமையால்’ என்புழி ஈர விறகின் கூட்டம் செயற்கை. அது ‘யாண்டுப் புகை உண்டு ஆண்டு ஈர விறகின்கூட்டம் உண்டு’ எனச் சாத்தியப் பொருளில் வியாபகமாயும், ‘யாண்டுத் தீ உண்டு ஆண்டு, ஈரவிறன்கூட்டம் இன்று, ஓழுகக் காய்ச்சிய இரும்பில் ஈரவிறகு இன்மையின்’ என ஏதுவில் வியாபகமின்றியும் இருத்தலின், ஈர விறகின் கூட்டம் உபாதி, அவ்வுபாதியுடைமையின் வன்னியுடைமையாகிய ஏது வியாப்பியத் தன்மையசித்தம்,

(தீபிகை) வியாப்பியத்தன்மை எ-து வியாப்பியத்தன்மைய சித்தத்தின் இலக்கணம் கூறுகின்றது.

செயற்கை எ-து செயற்கை இலக்கணம் கூறுகின்றது. செயற்கை துணி பொருளெல்லாவற்றினும் வியாபிப்பதும். பக்கதருமத்தான் வரைந்துகொள்ளப்படும் துணிபொருளின் வியாபீப்பதும், ஏதுவான் வரைந்து கொள்ளப்படும் துணி பொருளின் வியாபிப்பதும், யாதானும் ஓர் தருமத்தான் வரைந்துகொள்ளப்படும் துணிபொருளின் வியாபிப்பதும் என நான்கு வகைத்து. அவற்றுள், முதலது ஈரவிறகின் கூட்டம். இரண்டாவது ‘வாயுக் காட்சிப்பொருள், * அளவை யான் அளக்கற்பாலதாகலின், என்பது, ஈண்டுப் புறப் பொருண்மையான் வரைந்துகொள்ளப்படும் காட்சிப் பொருளின் வியாபிப்பது உற்பூத உருவம் என்க. மூன்றுவது ‘அழிவுபாட்டபாவம் நாசமுடைத்து, உண்டாகற்பாலதாகலின்’ என்பது, ஈண்டு உண்டாகற்பால தாந்தன் மையான் வரைந்துகொள்ளப்படும் நாசமுடைமையின் வியாபிப்பது பாவத்தன்மை †நான்காவது ‘முன்னபாவம் நாசமுடைத்து, அளவையான் அளக்கற்பாலதாகலின்' என்பது, ஈண்டு உண்டாகற்பாலதாந்தன்மையான் வரைந்து கொள்ளப்படும் நாசம் உடைமையின் வியாபிப்பது பாவத்தன்மை எனக்கொள்க.

* இங்கு காட்சிப் பரிசத்திற்குப் பற்றுக்கோடாகலான்' என்றும்
† இங்கு முன்னபாவம் நாசமுடைத்தன்று, உண்டாகற்பால தன்றாகலின்' என்றும் இருப்பின் பொருந்துவதாகும்.

67. தன்னுல் சாதிக்கப்படும் பொருளினது அபாவம் மற்றோளவையான் துணியப்படின், அது பாதிதம் என்னும் ஏதுப்போலி: அது 'நெருப்புச் சூடில்லது, திரவியம் ஆதலின்' என வரும். ஈண்டுச் சூடின்மை சாத்தியம், அதன் அபாவமாகிய சூடு துவக்கந்திரியக் காட்சியான் அறியப்படுதலின் இது பாதிதமாயிற்று. அனுமானம் உரைக்கப்பட்டது.

(தீபிகை) தன்னுல் எ-து பாதஇதத்தன் இலக்கணம் கூறுகின்றது.

அநைகாந்திகம், விருத்தம். சற்பிரதிபக்கம், அசித்தம், பாதிதம் என்பவற்றைப் பிறழ்வுடையது, மாறுகொள்வது, மறுதலையுடையது, பேறில்லது, மறுப்புடையது என மொழி பெயர்த்துக் கொள்க.

இவற்றுள், பாதிதம் கொள்ளற்பாலதன் அபாவத்தை நிச்சயித்தலானும், சற்பிரதிபக்கம் மறுதலைப் பொருளுணர்விற்குக் கருவி ஆகலானும், அனுமிதிக்கே தடை ஆவனவாம். ஏனையவை ஆராய்ச்சிக்குத் தடையாய் இருந்துகொண்டே அனுமிதிக்குத் தடையாவனவாம். அவற்றுள்ளும் பொது வநைகாந்திகம் பிறழாமை இன்மையானும், விருத்தம் ஒரு நிலைக்களத்து உளதாகலின்மையானும். வியாப்பியத்தன்மைய சத்தம் விசேடணம் அடுத்த வியாத்தயின்மையானும், சிறப்பு அநைகாந்திகமும் முடிவுபெறுமையும் வியாத்திக்கண் ஐயம் தோற்றுவித்தலானும், வியாத்தியுணர்விற்குத் தடை, சார்பித்தமும் உருவ சத்தமும் பக்கதருமத்தன்மை யுணர்விற்குத் தடையெனத் தெரித்தகொள்க. செயற்கை பிறழ்ச்சியுணர்வின் வழியானே வியாத்தியுணர்விற்குத் தடை துணிந்த தனைத் துணிவிப்பதாகிய சித்தசாதனம் பக்க தருமத்தன்மையைச்சிதைத்தலான் சார்படித்தத்துள் அடங்கும். தோல்வித்தானத்துள் அடங்கும் என்பர் நவீனர்.

## உவமானப்பிரமாணம்

68. உவமானம் உவமிதி அறிவிற்குக் கரணம். உவமிதி பெயர்க்கும் பெயர்ப் பொருட்கும் உள்ள சம்பந்தம் அறியும் அறிவு. அதற்குக் கரணம் ஒப்புமை அறிவு. அஃது எங்ஙன மெனின், ஆமா என்னும் சொற்குப் பொருள் உணராதான் ஒருவன் 'ஆவினை யொக்கும் ஆமா' என ஓர் ஆண்மகன் கூறக் கேட்டு, காட்டகம் புக்கானுகை; அவன் கூறிய தொடர்மொழிப் பொருளைக்கருதி ஆவொப்புமை அடுத்த பிண்டத்தைக்கண்ட பின்னர் 'இது ஆமா' என்னும் உவமிதியறிவு தோன்றும் என்க. உவமானம் உரைக்கப்பட்டது.

(தீபிகை) உவமானம் எ-து உவமானத்து இலக்கணம் கூறுகின்றது.

உவமிதி எ-து உவமிதி இலக்கணம் கூறுகின்றது.

## சத்தப்பிரமாணம்

69. சத்தப்பிரமாணம் ஆத்தன்வாக்கீயம். ஆத்தன் உரியோன் என்பன ஒருபொருட்கிளவி. ஆத்தனுவான் உண்மைப் பொருளைக் கூறுவான். வாக்கியம் பதங்களின் கூட்டம்: அது 'ஆவைக்கொணு' என்பன முதலியவாம். பதமாவது ஆற்றல் உடையது. ஆற்றல் "இப்பதத்தால் இப் பொருள் உணர்த்துக' என்னும் இறைவன் சங்கேதம்.

(தீபிகை) சத்தப்பிரமாணம் எ-து சத்தப் பிரமாணத்து இலக்கணம் கூறுகின்றது.

ஆத்தன் எ-து ஆத்தன் இன்னன் என்கின்றது.

வாக்கியம் எ-து வாக்யம் இன்னது என்கின்றது.

பதம் எ-து பதத்தின் இலக்கணம் கூறுகின்றது.

ஆற்றல் எ-து பொருணிணைவு நிகழ்தற்கு அனுகூலமாய பதங்கட்கும் பதார்த்த ங்கட்கும் **உளதாய சம்பந்தம்**. ஆற்றலெனவும் அது வேறு பதார்த்தம் எனவும் சைமினிமதநூலார் கூறுப; அதனை மறுத்து ஆற்றலின்னது என்கின்றது. ஆதன், பூதன் முதலிய வற்றிற்குப்போலக் குடம்முதலிய பதங்கட்கும் சங்கேதமே ஆற்றலாகலின், அது வேறு பதார்த்தம் என்பது பொருந்தாது என்பதாம்.

ஆ முதலிய பதங்களால் சாதியே முன்னர்க் கருதப்படுதலின் பதங்கட்குச் சாதியின்கண்ணே ஆற்றலெனவும், பொருட்பெறுதி கடா முதலியவற்றுல் நிகழுமெனவும் கூறுவாரும் உளர். அது பொருந்தாது; 'ஆவைக்கொணு' என்றற்றொடக்கத்து முதியோர் வழக்கின்கண் யாண்டும் கொணர்தல் முதலியன பொருளின்கண்ணே நிகழக் காண்டலின் சாதியடுத்த பொருளின்கண்ணே ஆற்றல் என்பதே பொருத்த முடைத்து ஆகலின். ஆற்றல் உணருமாறு முதியோர் வழக்கால் துணியப்படும்: அங்ஙனமன்றே, சொற் பொருள் உணர்தல் வேட்கையுடையான் ஓர் இளையோன் 'ஆவைக்கொணு' எனமுதியோன் கூறும் தொடர்மொழியைக் கேட்ட பின்னர், இடைப்பட்ட முதியோன் முயலுந்தொழிலை நோக்கி, ஆவைக்கொணர அதனையுங் கண்டு, இடைப்பட்ட முதியோன் முயலுந்தொழில் நிகழ்தற்குக் காரணமாகிய ஞானம் உடன்பாட்டானும் மறையானும் தொடர்மொழியால் தோற்றற்பாலதெனத் தெளிந்து, 'குதிரையைக்கொணு' 'ஆவைக் கட்டு' என்னும் வேறுதொடர் மொழிக்கண் முன்னும் பின்னும் உற்றுநோக்கி, ஆ என்னும் பதத்திற்கு ஆத்தன்மை அடுத்த பிண்டத்தின்கண் ஆற்றல், குதிரை என்னும் பதத்திற்குக் குதிரைத்தன்மையடுத்த பிண்டத்தின் கண் ஆற்றல் எனச் சொற்பொரு ளுணர்ந்துகொள்ளும் என்க.

அஃது அங்ஙனமாக, வழக்கமனைத்தும் யாண்டும்காரியப் பொருட்டாகலின் காரியப்பொருட்டு நிகழும் தொடர்மொழிக் கண்ணே சொற்பொருள் உணரப்படுமன்றி நிகழ்ந்ததன் மேற்றுய தொடர்மொழிக்கண் சொற்பொருள் உணர்ச்சி நிகழாதால் எனின்:- அற்றன்று, 'கூடலின்கண் முதுகுடுமிப் பெருவழுதி உளன்' என்றற்றொட

க்கத்து நிகழ்ந்ததன் கண்ணும் வழக்கம் உண்மையானும், 'மலர்ந்த தாமரைக்கண் வண்டு உளது' என்றற்றொடக்கத்து யாண்டும் உணரப்படும் பதத்தினைச் சார்த்தி வழங்குதலான் நிகழ்ந்ததன் கண்ணும் வண்டு முதலியவற்றின் சொற்பொருள் உணர்வு நிகழக் காண்டலானும் என்க.

இலக்கணையும் சத்தத்தின் கண் உள்ளது. ஆற்றலுடைத்தாகற்பாலதன் சம்பந்தம் இலக்கணை: அது 'கங்கையின்கண் இடைச்சேரி' என்பது, ஈண்டுக் கங்கை என்னும் சொற்குப் பொருளாகிய வெள்ளத்தின் சம்பந்தத்தானே கரை என்பது உணரப்படுமாகலின், கரையின்கண்ணும் ஆற்றலுடைத்து என்றல் வேண்டாமை உணர்க. மா முதலிய பதங்கட்காயின் மாமரத்திற்கும் குதிரைக்கும் ஒன்றற்கொன்று சம்பந்தமின்மையின், ஆண்டு வெவ்வேறுற்றல் வேண்டற்பாலனவாம்.

அவ்விலக்கணை விட்டவிலக்கணையும், விடாத விலக்கணையும், விட்டுவிடாத விலக்கணையும் என மூவகைத்து. சொல்லின் பொருட்குக் கொண்டு கூட்டு இல்லாத விடத்து விட்டவிலக்கணை: அது 'கட்டில் கரைகின்றது' என்பது. சொல்லின் பொருட்கும் கொண்டுகூட்டு உள்ளலிடத்து விடாதவிலக்கணை: 'அது கலிகையாளர் செல்கின்றுர்' என்பது. சொற் பொருளின் ஏகதேசத்தை விட்டு ஏகதேசத்திற்குக் கொண்டு கூட்டுள்ளவிடத்து விட்டுவிடாத விலக்கணை; 'அது நீயாகின்றாய்' என்பது. 'குன்றமியானை' என்றுற்போல உருவகம் முதலியனவும், குறிக்கப்படும் குணத்தின் சம்பந்தத்தான் உணரப்படுதலின், இலக்கணையேயாம். குறிப்பும் ஆற்றல் இலக்கணை என்னும் இவற்றுள் அடங்கும். பொருளாற்றலால் உணரப்படும் குறிப்பு அனுமானம் முதலியவற்றுன் வேறேராற்றுற்பெறப்படுவது. தாற்பரியவுணர்வு நிகழாமை இலக்கணைக்குக் காரணம். தாற்பரியம் அவ்வப் பொருளுணர்ச்சி விருப்பான் உச்சரிக்கப் படுந்தன்மை. வெவ்வேறுபொருள் பயத்தலின், _தாற்பரியவுணர்வும் தொடர்மொழிப் பொருளுணர்ச்சிக்குக் காரணம். தாற்பரியத்தை உணர்விப்பது வினை, சார்பு, இடம் முதலியன என அறிக.

'பிறலிப் பெருங்கடல் நீந்துவர்' என்புழிச் 'சேர்ந்தார்' என்பது சொல்லெச்சம். அற்றேல், சொற்களெல்லாம் பொருளுணர்தற்பொருட்டு ஆகலின் பொருளுணர்ந்தன்றிச் சொல் வருவிக்கலாகாமையின் பொருளெச்சம் என்றலே பொருத்தமுடைத்து எனின்:- அற்றன்று; சொல்விசேடத்தான் தோன்றற்பாலதாய சொற்சொற்பொருளுணர்ச்சியே சொல்லுணர்ச்சிக்கு ஏதுவாகலின். அவ்வாறு கொள்ளாக்கால், 'குடம் செயப்படுபொருண்மை கொணர்தல் வினை முதற்றன்மை' என்றவழிக் 'குட்த்தைக கொணர்ந்தான்' என்னும் சொல்லாற் பெறப்படும் உணர்ச்சி நிகழ்தல் வேண்டுமென்பது. பங்கயம் முதலிய சொற்களின் அவயவ ஆற்றல் காரணமும் பொது ஆற்றல் இடுகுறியும் விளக்குதலின் இன்னேரன்னவைகாரண இடுகுறி என்க. நியதமாய்த் தாமரையுணர்வே நிகழ்தற்பொருட்டுப் பொதுவாற்றலும். வேண்டப்பட்டது, அல்லாக்கால் குவளை முதலியவற்றையும் பங்கயமெனல் வேண்டுதலின். பிரபாகரமத நூலார் மற்றென்றனோடு கொண்டு கூட்டுதற்கண் ஆற்றலென்பர். கௌதம மதநூலார் கொண்டு கூட்டுதல் தொடர் மொழிப் பொருளின் தன்மையாக

உணரப்படுதலின், கொண்டுகூட்டும் கூற்றின்கண்ணே ஆற்றல் கொள்ளற்பாலதன் று என்பர்.

70. வாக்கியப் பொருளுணர்விற்குக் காரணம் அவாய் நிலையும். தகுதியும், அண்மையுமாம்.

(தீபிகை) அவாய்நிலையும் தகுதியும் அண்மையும் எ-து அவற்றின் ஞானம் என்றவாறு.

71. அவாய்நிலை ஒருபதம் தன்னை முடிப்பதொரு பதம் இல்லாதவழி முடிவுபெறாது நிற்றல். தகுதி பொருட்கு வாதையின்மை, அண்மை பதங்களை ஓரு தொடராக விரையக் கூறுதல்.

(தீபகை) அவாய்நிலை எ - து அவாய்நிலை இலக்கணம் கூறுகின்றது.

தகுதி எ - து தகுதி இலக்கணம் கூறுகின்றது.

அண்மை எ-.து அண்மை இலக்கணம் கூறுகிறது. சொல்லில் பொருளுணர்ச்சி விரையத் தோன்றுதல் அண்மை என்றவாறு. உச்சரித்தலும், அதனைப் பயப்பிப் கதாகலின் அண்மை எனப்பட்டது.

72. அவாய்நிலை முதலிய மூன்றும் இல்லாத வாக்கியம் பிரமாணமன்று. ‘ஆ குரை ஆண்மகன் யானை’ என்பது. அவாய் நிலையின்மையால் பிரமாணமன்று, ‘தீயால்நனை’ என்பது தகுதியின்மையால் பிரமாணமன்று. ‘ஆவைக் கொணு’ என்றல் முதலியன, ஒருதொடராகக் கூறுது யாமத்துக்கு ஒன்றென்றுகக் கூறின் அண்மை யின்மையால் பிரமாணமன்று.

(தீபிகை) ஆ குதிரை எ - து அதற்கு உதாரணம் கூறுகின்றது. ‘குடம் செயப்படுபொருண்மை கொணர்தல் வினைமுதற்றன்மை’ என்பது அவாய் நிலையின் மைக்கு உதாரணமெனக் காண்க.

73. இத்தொடர் மொழி, வேதவாக்கியம், உலகவாக்கியம் என இருவகைப்படும், வேதவாக்கியம் இறைவன் வாய் மொழியாகலான் எல்லாம் பிரமாணமேயாம். உலக வாக்கியத்தின் உரியோன் வாய்மொழி பிரமாணம். ஏனையது அப் பிரமாணம்.

(தீபிகை) வேதவாக்கியம் எ-து வேதவாக்கயத்திற்கு விசேடம் கூறுகின்றது. வேதம் அநாதியாயுண்மையின் இறைவன் வாக்கியமென்றது என்னையெனின்:- அற்றன்று; வேதம் புருடனுல் செய்யப்பட்டது- வாக்கயத் திரட்சியா யிருத்தலின், பாரதம் முதலியவற்றின் வாக்கியம்போலும் என அறிக. இவ்வனுமானத்திற்குக் கருத்தாவுண்மை நினைக்கப் படுதல் செய்கையாம் பிற எனின்:- கௌதமர் முதலியோ

ரால் மாணுக்கர் பரம்பரையின் வேதத்திற்கும் கருத்தாவுண்மை நினைக்கப்படுதலின் ஏதுவினும் வியாபித்தலின் ஆகாது என்க. “அவனிடத்தினின்றும் வேதம் மூன்றும் பிறந்தன” என்னும் சுருதி உண்மையும் உணர்க.

அற்றேல், ‘இஃது அந்தக் ககரம்' என முன்னதனுணர்வே நிகழ்தலின் எழுத்துக்களெல்லாம் நித்தமாதல் பெற்றும். பெறவே, வேதம் அநாதியென்றுற்படும் இழுக்கு என்னை எனின்:- அற்றன்று. ‘ககரம் தோன்றிற்று’ ‘ககரம் அழிந்தது’ என்னும் உணர்வு நிகழ்தலான் எழுத்துக்களெல்லாம் அநித்தமாதல் பெறப்பட்டமையின் ‘இஃது அந்தக் ககரம்' என முன்னதனுணர்வு நிகழ்தல். ‘இஃது அந்த விளக்கின் சுடர்’ என்பதுபோல அதன் சாதிபற்றி என்க’ எழுத்துக்களை நித்தமெனக்கொள்ளினும் தொடர்பாடாகக் கோவைப்படும் வாக்கியம் அநித்தமேயாம். ஆதலான், வேதம் இறைவன் வாய் மொழியே எனக்கொள்க. மனு முதலிய மிருதிநூல்களும் ஒழுக்கமும், வேதத்தை முதல் நூலாகவுடைமையின் பிரமாணமேயாம், மிருதிக்கு முதல் நூலாகிய வேத வாக்யம் இக்காலத்து ஓதுவாரின்மையின் மிருதிக்கு முதனூலாயுள்ள தொரு சாகை இறந்தது என்று கொள்ளற்பாற்று.

இக்காலத்து வழங்கப்படும் வேதவாக்கியம் முதல்நூலாமெனக் கோடல் போருந்தாமையின், என்றும் அனுமித்து அறியற்பாலதோர் வேதம் முதனூலாக உண்டு எனின்:- அது பொருந்தாது; அவ்வாறு உண்டாயினும் எழுத்துக்களின் தொடர்ப்பாட்டு உணர்வு பிறவாமையின், உணர்வார் இன்மையான் என்க, அற்றேல், ‘இப்பதங்கள் நினைப்பிக்கப்படும் பொருட்சம்பந்தம் உடையன, அவாய்நிலை முதலிய வற்றை யுடைய சொற்றிரட்டியாகலின், நம்மனோர் வாக்கியம்போலும்' என்னும் அனுமானத்தானே யாண்டும் உணர்வு நிகழ்தலின் சத்தம் வேறு பிரமாணமன்று எனின்: அற்றன்று; சத்தவுணர்வு அனுமிதியுணர்விற்கு வேறுய இலக்கணமுடைத்து என்பதற்குச் ‘சொல்லான் அறிந்தேன்’ எனப் பின்னிகழும் உணர்வே சான்றுதல் எல்லார்க்கும் ஒப்பமுடிந்தது ஆகலின்

இனிப் ‘பகலுண்ணுன், சாத்தன் பருத்திருப்பன்’ எனக் கண்டாயினும் கேட்டாயினும், உணர்ந்தவழிப்பருமை வேறெராற்றுலாகாமையின் இரவு உண்டல் பொருளால் கொள்ளப்படுமாகலின், அருத்தாபத்தியும் வேறு பிரமாணமாமாலோ எனின்:- அற்றன்று; ‘சாத்தன் இரவுண்பன், பகலுண்ணுனுயும் பருத்தருத்தலின்’ என்னும் அனுமானத்தானே இரவுண்டல் பெறப்படுதலின் என்க. ‘நூற்றில் ஐம்பது உண்டு’ என்னும் உண்மையும் அனுமானமேயாம், ‘இவ் ஆலில் பேயுண்டு' என்னும் ஐதிகமும் அறியப்படாத தன்மேற்றுகிய சத்தப்பிரமாணமே. கை முதலியன அசைத்தலாகிய சேட்டையும், சத்தானுமானத்தின் வழியானே வழக்கிற்கு ஏது ஆகலின், வேறு பிரமாணமன்று. ஆதலால் காட்டு, கருதல், ஒப்பு, உரை எனக் கூறப்பட்ட நான்குமே பிரமாணமெனக்கொள்க.

இனி ஞானங்கள், அதனை உடையதன்கண் அது வீசேடணமாகத் தோன்றுதல் தன்னுல் உணர்தற்பாலதோ பிறிதானுணர் தற்பாலதோ என்று ஆராயத்தக்கன. ஈண்டு ஞானம் பிரமாணமாதல் அதன் பிரமாணமாதலின்மையைக் கவராது எல்லா

ஞானங்களையும் கவருங்கருவியால் கவரற்பாலதோ அன்றே என்பது ஐயப்பாடு. இவ்கிரண்டனுள். முன்னையது தன்னால் உணர்தற்பாலதாதல்; பின்னையது பிறிதான் உணர்தற்பாலதாதல். அனுமானத்தால் கவரற்பாலதாகலான் துணிந்தானைத் துணித லென்னுங் குற்றம் வாராமற் நீக்குதற்பொருட்டு 'எல்லாம்' என்றும் இவ்வுணர்வு மெய்யனுபவம் அன்று என்னும் ஞானத்தால் பிரமாணமாதல் கவரப்படாமையின் ஆண்டு மறுப்பு வாராமை நீக்குதற்குப் 'பிரமாணமாதலின்மையைக் கவராது' என்றும், இவ்வுணர்வு மெய்யனுபவமன்று எனப் பின்னிகழும் உணர்வு பிரமாணமா தலைக் கவருங் கருவிக்குப் பிரமாணமாதலின்மையைக் கவருந்தன்மை இன்மை யால் தன்னாலாதல் இன்றாய் முடியும். அதனை நீக்குதற்கு 'அதன்' என்றும் கூறிய வாறு. அது பிரமாணமாதலின்மையைக் கவராது என்றது பிரமாணமாதற்குச் சார்பா யுள்ளதன் பிரமாணமாதலின்மையைக் கவராது என்றவாறு. எடுத்துக்காட்டிய உதாரணத்தின்கண் முந்திய முயற்சியின் பிரமாணமாதலின்மையைக் கவர்வது பின் முயற்சியின் அதனைக் கவராமையின் தன்னாலாதல் பெறப்படும்.

அற்றேல், 'குடத்தை யான் காண்டுன்றேன்' என்னும் பின்னிகழ்ச்சிக்குக் குடமும் குடத்தன்மையும் போல அவற்றின் சம்பந்தமும் விடயமாகலின் முயற்சி வடிவாகிய சம்பந்தம் ஒப்பறிகழ்தலின் முன்னர்த் தோன்றும் உருவின் விசேடணத் தின் சம்பந்தமே மெய்யனுபவத் தன்மையாகிய பதார்த்தமாகலின் பிரமாணமாதல் தன்னாலே உணரப்படுமாலோ எனின்:- அற்றன்று; பிரமாணமாதல் தன்னாலுணர்தற் பாலதாயின் புனணர்வு தோன்றியது மெய்யோ அன்றே எனப் பயிலாத காலத்து மெய்யனுபவத்தன்மைக்கண் ஐயப்பாடின்றாதல் வேண்டும். பிரமாணமாதல் பின் முயற்சியால் தெளியப்படுதலான், முன்னர் ஐயப்பாடுண்மை பெறப்படுதலின், தன்னா லுணர்தற்பாலதாதலின்மையால் பிறிதால் உணர்தற்பாலதேயாம்; அங்ஙனமன்றே, முதற்கண் புனல் உணர்வு தோன்றிய பின்னர் முயன்று சென்றுழிப் புனல் கிடைத்த தாயின், முன்னர்த்தோன்றிய புனலுணர்வு மெய்யனுபவம், முயன்று சென்று பயப் படச் செய்தலின். 'யாது மெய்யனுபவம் அன்று அது பயப்படச் செய்யாது, பொய்யனு வம் போலும்' என்னும் கேவலவெதிரேகி அனுமானத்தான் மெய்யனுபவத் தன்மை தெளியப்படும், இரண்டாவது நிகழ்வது முதலிய ஞானங்களின் முன்னை ஞானம் திருட்டாந்தமாதல் உண்மை யான், அதன் சாதியுடைமையாகிய இலிங்கத்தானே அந் நுவயவெதிரேகி அனுமானத்தானும் தெளியப்படும். மெய்யனுபவத் தோற்றத்தின் கண் பிறிதானுதல் குணத்தாலுண்டாதற்பாலதாதல். மெய்யனுபவத்தற்குச் இறந்த காரணம் குணம், பொய்யனுபவத்துற்குச் சிறந்த காரணம் குற்றம். அவற்றுள், காட்டியுணர்வின்கண் குணம் விசேடணத்தையுடைய விசேடியத்தின் சம்பந்தம், அனுமிதிக்கட் குணம் வியாபகமுடையதன்கண் வியாப்பியமென்னும் உணர்வு, உவமிதிக்கண் குணம் மெய்யான ஒப்புமையுணர்வு. சத்தவுணர்வின்கண் குணம் மெய்யான தகுதி முதலியற்றின் உணர்வு என்னும் இன்னோரன்ன பிறவும் ஆராய்ந்து உணர்ந்துகொள்க. முன்னர்த் தோன்ற நின்ற உருவில் பிரகாரமின்மை முன் முயற்சியின் உணரப்படாமையின், பொய்யனுபவமாதல் பிறிதான் உணர்தற்பாலதே யாம். தோற்றத்தின்கண் பிறிதானுதல் பித்தம் முதலிய குற்றத்தான் உண்டாகற்பால தாதல்.

அற்றேல், பொய்யுணர்வு என்பதே இல்லை அனைத்துணர்வும் மெய்யாகலின் இப்பியின்கண் 'இது வெள்ளி' என்னும் உணர்வான் முயற்சிநிகழக் காண்டலின் மலைவு உண்டு என்பது கூடாது. வெள்ளியின் நினைவும் முன்னர்த் தோன்று நின்ற தன்னுணர்வும் என்னும் இரண்டானுமே முயற்சி நிகழ்தல் கூடுமாகலின், முன்னர்த் தோன்றியதன்கண் வேறுபாடு தோன்றுமையே யாண்டும் முயற்சி பிறப்பித்தலான் 'இது வெள்ளியன்று' என்பது முதலியவற்றின் மிகைப்பாடு இன்மையான் எனின்:- அற்றன்று, மெய்யாகிய வெள்ளியிடத்து முன்னர்த் தோன்று நின்றது வீசேடியமாக வும் வெள்ளித்தன்மை விசேடணமாகவும் உடைய ஞானம் முயற்சியைப் பிறப்பிக் கும் என நொய்திற்கோடல் பொருத்தமுடைத்தாகலின், இப்பியின்கண்ணும் வெள்ளி யின் விழைவானே முயற்சியைப் பிறப்பிப்பதாகலின் அடையடுத்த ஞானமே கொள் ளற்பாற்றாகலான் என்க.

74. வாக்கியப்பொருளுணர்ச்சி சத்தத்தாலாய உணர்ச்சி; அதற்குக்காரணம் சத்தம். இங்ஙனம் மெய்யனுபவம் தெரித்துரைக்கப்பட்டது.

75. இனி. பொய்யனுபவம் ஐயம், திரிவு, தருக்கமென்னும் வேறுபாட்டான் மூவகைத்து.

(தீபிகை) இனிப் பொய்யனுபவம் எ-து பொய்யனுபவத்தைப் பகுக்கின்றது. கனவு மானதக்காட்சித் திரிபாகலின் மூவகைமையின் மாறுபாடின்மை உணர்க.

76. அவற்றுள், ஐயமாவது ஒரு தருமியின் மாறுபட்ட பல தருமங்களான் விசேடிக்கப்பட்ட உணர்வு. தருமம் எனினும் தன்மை எனினும் ஒக்கும். அது 'குற்றியோ மகனோ' என்பது.

(தீபிகை) அவற்றுள், ஐயம் எ-து ஐய இலக்கணம் கூறுகின்றது 'புலி வில் கெண்டை' எனத்திரட்சிபற்றிய தன்கண் அதிவியாத்தி நீக்குதற்கு 'ஒரு தருமியின்' என்றும். 'குடம் திரவியம்' என்பது முதலியவற்றின் குடத்தன்மை திரவியத்தன்மை எனப்பலதன்மை உண்மையின் ஆண்டு அதிவியாத்து நீக்குதற்கு 'மாறுபட்ட' என்றும், 'ஆடைத்தன்மையின் மாறுபட்ட குடத்தன்மையுடையது' என்பதன் கண் அதிவியாத்திநீக்குதற்குப் 'பல' என்றும் கூறியவாறு.

77. திரிவு மித்தையினுலாய உணர்வு: அது இப்பியை வெள்ளியென்பது.

(தீபிகை) திரிவு எ-து திரிவு இலக்கணம் கூறுகின்றது; அஃது இல்லாததன்கண் அது விசேடண மாதலுடைமை நிச்சயித்தல் என்றவாறு.

78. தருக்கம் வியாப்பியத்தை ஆரோபித்தலான் வியாபகத்தை ஆரோபிப்பது; அது 'தீயில்லையாகில் புகையும் இல்லையாதல்வேண்டும்' என்பது.

(தீபிகை) தருக்கம் எ-து தருக்கத்தனிலக்கணம் கூறுகின்றது. தருக்கம், திரிவினுள் அடங்குமாயினும் பிரமாணத்திற்கு உபகாரமாதலான், வேறு கூறப்பட் டது.

79. நினைவு மெய், பொய் என இருவகைத்து, மெய்யனுபவத்தால் தோன்றிய நினைவு மெய் பொய் யனுபவத்தால் தோன்றிய நினைவு பொய். புத்தி உரைக்கப்பட் டது.

(தீபிகை) நினைவு எ-து நினைவைப் பகுக்கின்றது

80. சுகம் எல்லார்க்கும் நலமாக உணரப்படுவது.

(தீபிகை) சுகம் எ-து இன்பத்தின் இலக்கணம் கூறுகின்றது, 'இன்பமுடையேன் யான்' என்றற்றொடக்கத்துப் பின்னிகழ்ச்சியால் குறித்துணரப்படும் இன்பத்தன்மை முதலியன உடைமையே இலக்கணம் என்க. ஈண்டுக்கூறியது சொரூபம் என்க,

81. துக்கம் எல்லார்க்கும் தீங்காக உணரப்படுவது.

82. இச்சை = காமம்.

83. வெறுப்பு = வெகுளி,

84. முயற்சி தொழில்.

85. தர்மம் விதிவினையால் தோன்றியது.

86. அதர்மம் விலக்குவினையால் தோன்றியது

87. புத்தி முதலிய எட்டும் ஆன்மாவிற்கே உரிய குணங்கள். புத்தி, இச்சை, முயற்சி என்னும் மூன்றும் நித்தமும் அநித்தமும் ஆம். இறைவனுடைய புத்தி முதலிய மூன்றும் நித்தம்; உயிருடைய புத்தி முதலிய மூன்றும் அநித்தம்.

88. வாசனை வேகமும், பாவனையும், நிலைபெறுத்துகையும் என மூவகைத்து,

(தீபிகை) வாசனை எ - து வாசனையைப் பகுக்கின்றது. வாசனைத்தன்மையாகிய சாதியுடைமை வாசனையிலக்கணம்.

89. அவற்றுள், வேகம் பிருதிவி முதலிய நான்கினும் மனத்தினும் இருக்கும்.
(தீபிகை) அவற்றுள், வேகம் எ- து வேகத்திற்குப் பற்றுக்கோடு கூறுகின்றது. வேகத்தன்மைச் சாதியுடையது வேகம்.

**90.** பாவனை அனுபவத்தின் காரியமாய் நினைவிற்குக் காரணமாய் உள்ளது. அது ஆன்மாவின் மாத்திரம் இருக்கும்.

(தீபிகை) பாவனை எ- து பாவனை இலக்கணம் கூறுகின்றது. ஆன்மா முதலியவற்றின் அதிலியாத்தி நீக்குதற்கு 'அனுபவத்தின் காரியம்' என்றும், அனுபவத்தின் அழிவுபாட்டின் அதிவியாத்தி நீக்குதற்கு 'நினைவிற்குக் காரணம்' என்றும் கூறியவாறு. நினைவே வாசனைக்குக் காரணம் என்பர் நவீனர்.

**91.** நிலைபெறுத்துகை வேறுதன்மையாகச் செய்யப்பட்டது மீட்டும். அந்நிலையே ஆக்குவது. அது பாய் முதலிய பிருதிவியின் இருக்கும். குணம் கூறப்பட்டது,

(தீபிகை) நிலைபெறுத்துகை எ-து நிலை பெறுத்துகையின் இலக்கணம் கூறுகின்றது. எண்ணல் முதலிய எட்டும். நிமித்தத்தானுய நெகிழ்ச்சியும், வேகமும், நிலைபெறுத்துகையும் பொதுக்குணங்கள். ஏனை உருவம் முதலியன விசேட குணங் கள். திரவியத்தைப் பகுக்கும் உபாதி இரண்டின் ஒரு நிலைக்களத்து இராத சாதியுடைமை விசேட குணத்தன்மை.

## 3. கருமம் .

**92.** கருமம் = புடைபெயர்ச்சி. கருமம் ஐந்தனுள் எழும் பல் மேலிட்த்துக் கூடுதற்கு ஏது. வீழ்தல் கீழிடத்திற்கூடுதற்கு ஏது. வளைதல் உடல் வளைந்து கூடுதற்கு ஏது. *நிமிர்தல் நிமிர்ந்து கூடுதற்கு ஏது. ஏனைய அனைத்தும் நடத்தல் எனப்படும். அது பிருதிவி முதல் நான்கினும் மனத்தினும் இருக்கும்.

(தீபிகை) கருமம் எ-து கருமத்தின் இலக்கணம் கூறுகின்றது.

கருமம் ஐந்தனுள் எ-து எழும்பல் முதலியவற்றின் காரியவேறுபாடு கூறுகின்றது. உடலின் கண் மிகவும் கோணலை உண்டாக்குவது வளைதல். செவ்விதாகலை உண்டாக்குவது நிமிர்தல்.

* 'நிமிர்தல் - வளைந்த உடல் செவ்விதாதற்கு ஏது' என்பது திருத்தம்.

## 4. சாமானியம்

**93.** இனிச் சாமானியமாவது நித்தமாய், ஒன்றுய், பலவற்றின் ஒருங்கு சேறலையுடைய சாதி. அது மேல், கீழ் என இருவகைத்து. திரவியம், குணம், கன்மம் என்னும் மூன்றினும் இருக்கும், இருவகையுள், உண்மைத்தன்மை மேற்சாதி, திரவி யத்தன்மை முதலியன கீழ்ச்சாதி.

(தீபிகை) இனிச் சாமானியம் எ-து சாமானியத்தின் இலக்கணம் கூறுகின்றது. சையோகத்தின் அதிவியாத்தி நீக்குதற்கு 'நித்தம்' என்றும் பரமாணுவின் பரிமாணம்

முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்குப் 'பலவற்றின்' என்றும் கூறியவாறு, ஒருங்கே சேறல் சமவேதமாதல் என்பதாம். ஆகவே. அபாவம் முதலியவற்றின் அதிவ்யாத்தியின்மை உணர்க,

## 5. விசேடம்

94. இனி விசேடம் நித்தப் பொருள்களின் இருப்பனவாய். அவை வெவ்வேருய் நிற்றஇலத் தெரிப்பனவாம். நித்தப்பொருள்களாவன பிருதிவி முதலிய நான்கின் பரமாணுக்களும் ஆகாயம் முதலிய ஐந்தும் என உணர்க.

(தீபிகை) இனி விசேடம் எ-து விசேடத்தின் இலக்கணம் கூறுகின்றது.

## 6. சமவாயம்

95. இனிச் சமவாயமாவது நித்தமாகிய சம்பந்தம். அது நீக்கமின்றி இருப்பன வற்றின்கண் இருக்கும். யாவை இரண்டனுள் ஒன்று மற்றெுன்றஊனப்பற்றியே நிற்கும் அவை நீக்கமின்றியிருப்பன. அவை சிஊயும் முதலும், குணமும் குணியும். விஊயும் வீஊமுதலும், சாதியும் வடிவும், விசேடமும் நித்தியப்போருளும் என்பன.

(தீபிகை) இனிச் சமவாயம் எ-து சமவாயத்தின் இலக்கணம் கூறுகின்றது. சையோகத்தின் அதவியாத்தி நீக்குதற்கு 'நித்தம்' என்றும், ஆகாய முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்குச் 'சம்பந்தம்' என்றும் கூறியவாறு.

யாவை எ - து நீக்கமின்றியிருத்தலின் இலக்கணம் கூறுன்றது, 'கரியது குடம்' என்னும் அடையடுத்தவுணர்வு விசேடண விசேடியங்கட்குளதரிய சம்பந்தத்தை விடயமாக உடையது, அடை யடுத்த உணர்வாகலின், 'குழையன் என்னும் உணர்வு போலும்' என்னும் அனுமானத்தால், சமவாயம் உண்மை பெறப்பட்டது.

சிஊயும் முதலும் எ - து திரவிய சமவாயிகாரணம் சிஊ, அதனுல் உண்டாகற்பாலதாய திரவியம் முதல் எனக் காண்க.

## 7. அபாவம்

96. அபாவம் நான்கனுள், முன்னபாவம் தோற்றமின்றி நாசமுடையது; அது காரியத் தோற்றத்திற்கு முன்னுள்ளது.

(தீபீகை) முன்னபாவம் எ - து முன்னபாவத்தின் இலக்கணம் கூறுகின்றது. ஆகாயம் முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்கு 'நாசமுடையது' என்றும், குடம் முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்குத் 'தோற்றமின்றி' என்றும் கூறியவாறு. முன்னபாவம், தன் எதிர்மறைப் பொருளின் சமவாயி காரணத்தின்கண் இருந்து

எதர்மறைப் பொருளைத் தோற்றுவிப்பதாய்த் 'தோன்றும்' என்னும் வழக்கிற்கு ஏதுவாயதாம்.

**97.** அழிவுபாட்டபாவம் தோற்றம் உடைத்தாய், நாசமின்றியிருப்பது: அது *காரியத்தோற்றத்தின் பின்னுள்ளது.

* '**கா**ரியக்கேட்டின் பின்னுள்ளது' திருத்தம்.

(தீபிகை) அழிவுபாட்டபாவம் எ- து அழிவுபாட்ட பாவத்தின் இலக்கணம் கூறுகின்றது. குடம் முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்கு 'நாசம் இன்றி' என்றும் ஆகாயம் முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்குத் 'தோற்றம் உடைத்தாய்' என்றும் கூறியவாறு. அழிவுபாட்டபாவம், தன்னெதிர் மறையாற்றேன் றி, எதிர்மறையின் சமவாயிகாரணத்தின் இருப்பதாய் 'அழிந்தது' என்னும் வழக்கிற்கு ஏதுவாவதாம்.

**98.** முழுதுமபாவம் முக்காலத்னும் உளதாய சமுசர்க்கத்தான் வரைந்து கொள்ளப்படும் எதர்மறைத்தன்மையையுடையது; அது 'நிலத்தில் குடம் இல்லை' என்பதாம்.

(தீபிகை) முழுதுமபாவம் எ-து முழுதுமபாவத்தின் இலக்கணம் கூறுகின்றது. ஒன்றினொன்ற பாவத்தின் அதிவியாத்தி நீக்குதற்குச் 'சமுசர்க்கத்தான் வரைந்து கொள்ளப்படும்' என்றும், அழிவுபாட்டபாவம் முன்னபாவங்களின் அதிவியாத்தி நீக்குதற்கு 'முக்காலத்தினும் உளதாய்' என்றும் கூறியவாறு.

**99.** ஒன்றினொன்றபாவம் அதன் வடிவான் வரைந்த பொருளைப் பிரதியோதி யாகவுடைய இன்மை: அது 'குடம் ஆடையன்று' என வரும்.

(தீபிகை) ஒன்றினொன்றபாவம் எ - து ஒன்றினொன்ற பாவத்தின் இலக்கணம் கூறுகின்றது. எதிர்மறைப்பொருள் ஒன்றே உடைய முழுதுமபாவமும், ஒன்றினொன் றபாவமும், எதிர்மறைத் தன்மையை வரைந்து கொள்வதனை ஆரோபித்தலான் உளதாய சமுசர்க்க வேறுபாட்டால் பலவகையாம். அங்ஙகனமாமாறு, 'சாத்தன் உளனுயினும் குழையுடைய சாத்தன் இவன்' என்னும் உணர்ச்சி நிகழ்தலான் அடை யடுத்தனபாவம், 'ஒன்று உளதாயினும் இரண்டு இல்லை' என்னும் உணர்ச்சியான் இரண்டன் தன்மையான் வரைந்து கொள்ளப்பட்டதன் பாவம், சையோக சம்பந்தத் தான் குடம் உடைய நிலத்துச் சமவாயி சம்பந்தத்தான் குடம் இல்லை என்னும் அபாவம் எனப் பலவாய் விரிதல்காண்க. குடமுடைய நிலத்து வெவ்வேறு வகைப்பட்ட குடங்களின்மையின், குடத்தன்மையான் வரைந்து கொள்ளப்படும் பிரதி யோகியையுடைய பொதுவபாவம் வேறு எனக்கொள்க. ஒன்றினொன்ற பாவமும் இவ்வாறே காண்க. 'குடத்தன்மை யான் வரைந்து கொள்ளப்படும் ஆடையில்லை' என வேற்று நிலைக்களத்து உளதாய தன்மையான் வரைந்து கொள்ளப்பட்டதனபாவம்

வேறு கொளற்பாற்றன்று, ஆடையிற்குடத்தன்மை இல்லை என்பதே அதன் பொருளா கலின்.

வேறு எனக் கொள்ளின், கேவலாந்நுவயியாம், கால விசேடத்தன் உணரப் படும் அபாவம் முழுதுமபாவமே வேறன்றென்க, குடமில்லாத நிலத்துக் குடங்கொ ணர்ந்துழி முழுதுமபாவம் வேறிடத்துச் சேறலில்லா வழியும் உணர்ச்சி நிகழாமை யின், குடங்கொண்டு போயபின்னர் உணர்ச்சி நிகழ்தலின், நிலத்திற்கும் குடத்திற்கும் உள்ள சையோகத்தின் முன்னபாவமும் அழிவுபாட்டபாவமும் முழுதுமபாவ உணர்ச்சியை நிலைபெறுத்துவதெனக் கொள்ளற்பாற்று. அதனுனே குடமுடைய நிலத்து அதன் சையோகத்தின் முன்ன பாவமும் அழிவுபாட்டபாவமும் இன்மையின் முழுதுமபாவத்தின் உணர்ச்சி நிகழாது எனவும், குடங்கொண்டு போயவழி அதன் சையோகத்தின் அழிவுபாடு உண்மையின் அதனுணர்ச்சி நிகழ்வது எனவும் கொள்க, வேறு நிலைக்களம் ஆதலானே ‘இல்லை’ என்னும் வழக்கம் நிகழ்தல் கூடுமாகலின், அபாவம் வேறு பதார்த்தமன்று என்பது குருமதம். அது பொருந்தாது. அபாவம் கொள்ளாக்கால் 'வெறிது' இன்னது எனப்பொருள் கூறமாட்டாமையின். இல்லதன பாவமாவது அபாவமே, வேறன்று, வேறெனக்கொள்ளின் வரம் பின்றியோடுமாக லின். அழிவுபாட்டின் முன்ன பாவமும் முன்னபாவத்தின் அழிவும் தத்தம் எதிர் மறைப்பொருளே. வேறல்ல எனக் கொள்க. இல்லதனபாவம் வேறென்றே மூன்றும் அபாவம் முந்திய அபாவமாகலின், வரம்பின்றியோடு மாறில்லை என்பர் நவீனர்.

100. எல்லாப் பதார்த்தங்களும் முறையானே கூறியவற்றுள் அடங்குதலின், பதப்பொருள்கள் ஏழு என்பது பெற்றும்.

(தீபிகை) எல்லாப்பதார்த்தங்களும் எ-து பிரமாணம், பிரமேயம், ஐயம், பிரயோசனம், திருட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தர்க்கம், நிண்ணயம், வாதம், செற்பம், விதண்டை, ஏதுப்போலி, சலம், சாதி, தோல்வித்தானம் என்பவற்றின் உண்மையறிவால் வீடடைதல் உளதாமென நியாய நூலில். பதினுறு பதார்த்தம் கூறுதலான், ஏழு என்றது என்னை என்னும் கடாவிற்கு வீடை கூறுகின்றது. எல்லாப் பதார்த்தங்களும் ஏழனுள் அடங்கும் என்றவாறு.

ஆன்மா, சரீரம், இந்திரியம், அருத்தம், புத்தி, மனம், பிரவிருத்தி, தோடம், பிரேத்தியபாவம், பலம், துக்கம், அபவர்க்கம் எனப் பிரமேயம் பன்னிரு வகைத்து. பிரமேயம் - பிரமாணத்தால் அளக்கற்பாலது என்றவாறு. பிரவிருத்தி - தன்மா தன்மங்கள். தோடம் - விருப்பு வெறுப்பு மயக்கங்கள். விருப்பு - காமம். வெறுப்பு - வெகுளி. மயக்கம் - சரீரம் முதலியவற்றை ஆன்மா என மருளுதல். பிரேத்திய பாவம் - சாக்காடு, பலம் - போகம், அபகர்க்கம் - வீடுபேறு. அது தன்னிலைக்களத்து உளதாகிய துன்பத்தின் முன்ன பாவத்தோடு ஒருங்கு நில்லாத துன்பத்தின் அழிவுபாடு. பிரயோசனம் சுகமும், துக்கக்கேடும். திருட்டாந்தம் அடுக்களை முதலியன. சித்தாந்தம் பிரமாணமுடையது என உடன்பட்டது. நிண்ணயம் - நிச்சயித்தல். அது பிரமாணத்திற்குப் பயன்.

வாதம் - உண்மை உணர்தல் வேட்கையோன் கதை. செற்பம் - சாதனம் இரண்டுள்ள தன்கண்வெல்லும் வேட்கையுடையான் கதை. விதண்டை - தன் கோட்பாட்டை நிலை பெறுத்தாத கதை, கதையாவது கூறுவார் பலரையுடைத்தாய்ச் சங்கை உத்தரங்களைப் பயக்குந்தொடர்மொழியின் கோவைப்பாடு. சலம் - ஒரு கருத்துப்பற்றிக் கூறியமொழிக்கு வேறுபொருள் படைத்திட்டுக்கொண்டு பழித்தல். சாது - போலியுத்தரம், அது பொதுவியல்பு, வேற்றியல்பு, உயர்ச்சி, தாழ்ச்சி, புகழ்ந்துரை, பழித்துரை, விகற்பம், சாத்தியம், அடைவு, அடையாமை, பிரசங்கம், வேறு திருட்டாந்தம், உற்பத்தியின்மை, ஐயம், பிரகரணம் ஏதுவின்மை, அருத்தா பத்தி, விசேடமின்மை, உபலத்தி, அனுபலத்தி, காரணம், நித்தம், அநித்தம், காரியம் சமமாதல் என்க. தோல்வித்தானம் - வாதம் பேசுவார் தோல்வியுறுதற்கேது. அவை மேற்கோள் அழிவு, வேறு மேற்கோள், மேற்கோள் மாறுபாடு, மேற்கோள் விடுதல், வேற்றேது, வேற்றுப்பொருள், பொருளின்மை, பொருளுணரப்படாமை, பொருட் போலி, காலம் பெறுமை, குன்றக்கூறல், மிகைபடக்கூறல், கூறியது கூறல், பிற் கூற்றின்மை, அறியாமை, மறுக்கப்படாதமதத்தை உடன்பட்டுக்கூறல், உடன்படற் பாலதனை அவாவுதல், உடன்படற் பாலதல்லதனை உடன்படுதல், சித்தாந்தப்போலி, ஏதுப்போலி என்பனவாம். ஏனையவை வெளிப்படை.

அற்றேல், பதார்த்தம் ஏழென்றது என்னை? கைத்தலத்தின் நெருப்பேந்திய வழியும் தடையுண்டாயின் சூடு பிறவாமை காண்டலின் ஆற்றல் வேறுபதார்த்தமா லோ எனின்:- அற்றன்று; தடையின் அபாவம் காரியம் எவற்றிற்கும் காரணமாகலான் ஆற்றல் உடன்பாடு அன்மையின், காரணமாதற்றன்மையே ஆற்றலென்னும் பதார்த் தமாகலின் என்க. அற்றாயினும், சாம்பர் முதலியவற்றானே வெண்கலம் முதலிய வற்றில் தூய்மை பிறத்தல் காண்டலின், சார்புபற்றிய ஆற்றல் கொள்ளற்பாற்று எனின்:- அற்றன்று; தூய்மை என்னும் பதார்த்தமாவது சாம்பர் முதலியன கூடுங்கா லத்து ஒருங்கு நிற்பதாகய தீண்டற்பாலது அல்லதனைத் தீண்டுதலாகிய வாலா மையை எதிர்மறையாகவுடைய அபாவமெல்லாவற்றோடும் உடனிகழும் சாம்பர் முதலியவற்றின் அழிவுபாடே ஆகலின், உடைய பொருண்மையும் வேறு பதார்த்தம் அன்று, வேண்டியவாறே ஏமப்படுதல் தகுதியே உடைய பொருண்மை என்னும் பதார்த்தம் ஆகலின், உடைய பொருண்மையை வரைந்துகொள்வது ஏற்றல் விலைகொடுத்தல் முதலிய வற்றால் கொள்ளப்படுந்தன்மை.

இனி விதி இன்னதெனத் தெரிக்குமாறு:- விதியாவது முயற்சியைப் பிறப்பிப் பதாகிய இச்சையைத் தோற்றுவிக்கும் ஞானத்திற்கு விடயமாய் உள்ளது. அவ்விதி யை உணர்த்துவது வியங்கோள்விகுதி முதலியன. தொழில் முற்றுப்பெறுத தன்கண் முயறல் செல்லாமையின், தொழில் முற்றப்பெறு மென்னும் உணர்வு முயறலை நிகத்துவது. அற்றேல், நஞ்சு உண்டல் முதலியவற்றினும் முயற்சிசெல்லற்பாற்று எனின்:- அற்றன்று; காமிய விதிக்கண் விழையப்படுதற்குக் கருவித் தன்மையாகிய இலிங்கமுடைய தொழில் முற்றப் பெறு மென்னும் ஞானமும், நித்தவிதிக்கண் விதித்தகாலத்து நிகழற் பாற்று என்னும் ஞானமும், நைமித்திகத்தின்கண் நிமித்த வுணர்வால் தோன்றும் ஞானமுமே முயறலைத் தோற்றுவிப்பதாகலின், குருமதத்தார் விசேடணத்தை உடையதன்றன்மையின் நினைவால்தோன்றும் ஞானம்

உடனிகழுமாகலான், உடனிகழ்ச்சி உண்டு என்பர். அது பொருந்தாது; தொழிலான் முற்றுப்பெறும் விழையப்படுவதற்கு ஏதுவை உணரும் ஞானமே இச்சை வாயிலாக முயற்சியைப் பிறப்பிக்குமெனச் சுருங்கக் காட்டலான் கொள்ளாற்பாற்றுகலின்.

அற்றேல், நித்தவிதி விழையப்படும் பலத்துக்குக் கருவியன்மையின், ஆண்டு முயற் செல்லாமை வரப்பெறும் எனின்:- அற்றன்று; நித்தவிதிக்கண்ணும் விதித்தன செய்யாமையான் வருங்குற்றம் கழிதலாதல் பாவக்கேடாதல் பலமெனக் கொள்ளற் பாற்றாகலின். இதனுனே தொழிலான் முற்றுப்பெறும் விழையப்படுதற்கு ஏதுவாதற் றன்மையே வியங்கோள்விகுதப் பொருளெனக்கொள்க,

அற்றெல், துறக்கம் விழைவோன் சோதிட்டோமத்தான் வேட்க என்புழிக் ககரவிகுதியால் துறக்கத்திற்கு ஏதுவாகிய காரிய நிகழ்ச்சி உணரப்படும். அக்காரியம் வேள்வி எனின் அது விரையக் கெடுவதாகலான் எதிர்காலத்தின் வரக்கடவதாய துறக்கத்தற்கு ஏதுவாதல் கூடாமையின், அதற்குத் தகுதியாகிய நிலைபெற்ற காரியமாகிய அபூர்வமே விகுதிப் பொருளெனக் கோடற்பாற்று. காரியம் செய்கை யான் முற்றுப்பெறும். செய்கை செயப்படு பொருளுடைத்தாகலால் 'செயப்படு பொருள் யாது' என்னும் அவாய்நிலைக்கண் வேட்டல் செயப்படுபொருளாய் முடிவு பெறும். 'எவனுடைய, காரியம்' என ஏவப்படுவனவாய நிலைக்கண் 'துறக்கம் விழைவோன்' என்னும் பதம் ஏவப்படுவான் மேற்றுய் முடிவுபெறும். ஏவப்படுவான் காரியம் புந்திசெய்வான். அதனுனே சோதிட்டோமம் எனப் பெரிய யாகமாகிய செயப்படுபொருள் துறக்கம் விழைவோனுல் செயற்பாலதேன வாக்கியப்பொருள் முடிவுபெறும். இவ்விகுதி வேதத்தின் கண்ணதாகலின், 'சாங்காறும் எரியோம் புக' என்னும் நித்தியவிதி வாக்கியத்தினும் அபூர்வமே சொற்குப் பொருளாகக் கோடற் பாற்று.

"பிணியின்மை விழைவோன் மருந்து தன்னுக"' எனவும், உலகத்தின்கண்ண தாகிய வியங்கோள் விகுதிக்கு இலக்கணையால் தொழிற்காரியமே பொருளெனக் கோடற்பாற்று எனின்:- அற்றன்று; யாகத்தின் கண்ணும் தகுதியின்றெனத் தெளிவு பெறுமையின் ஏதுவே விருதிப்போருளாக உணர்ந்த பின்னர் உறுதிப்பொருட்டு அவாந்தர வியாபாரமாக அபூர்வங் கோடற்பாற்றாகலின். "புகழ்ந்தெடுத்துரைத்தலாற் கெட்டது" என்னுஞ்சுருதியானும் உணர்க. வேள்வியின் அழிவுபாடு வியாபாரம் அன்று. உலகின்கண் சொற்பொருள் உணர்ச்சி வலியான் வினைமுற்றின் கண்ணே வியங்கோளான் உணர்த்தப்படுவது செய்கையான் முற்றுப்பெறுவதாய் விழையப் படுவதற்கு ஏதுவாயுள்ளதேயாம் ஆகலின், வியங்கோள்தன்மையான் லிதிப்பொருண் மையும், விகுதத்தன்மையான் முயற்சிப் பொருண்மையும் உடைத்து, 'அடுகின்றுன்' அடுதலைச் செய்கின்றுன் என்னும் பொருள்தோன்றக் காண்டலானும். 'யாது செய்கின்றுன்' என்னும் கடாவின்கண் 'அடுகின்றுன்' என இறை நிகழ்தலானும், முயலுதலே விகுதிக்குப் பொருளாதல் தெளியப்பட்டமையான் என்பது. "தேர் நடக் கின்றது" என்றற்றெடக்கத்தின் இலக்கணையான் அதற்கு அனுகூலமான புடைபெயர் ச்சி பொருள், 'சாத்தன் அடுகின்றான்' 'சாத்தனுல் அரிசி அடப்படுன்றது' என்றற்றெ டக்கத்தின்கண் வினைமுதலும் செயப்படு பொருளும் விகுதிக்குப் பொருளல்ல.

அவற்றின் ஒருமை முதலிய எண்களே பொருள் என்க, விஜன முதலும் செயப்படு பொருளும் அவற்றை ஆசங்கத்தலாற்பெறுதும். 'கைகண்டேன்' என்புழித்தெளியக் கண்டேன் எனத் தெளிவின்கண் பகுதிக்கே ஆற்றல். உபசர்க்கங்கள் அவற்றை விளக்குதன்மாத்திரமே; அவற்றின்கண் ஆற்றலின்று என்க.

பதார்த்தவணர்விற்கு வீடுபேறே மேலாய உறுதிப்பயன். * "முந்தியவொருமை யாலே மொழிந்தவை கேட்டல் கேட்ட - சிந்தஜன செய்த லுண்மை தெளிந்தட லதுதா ஞக - வந்தவா றெய்தல் நிட்டை மருவுதலென்று நான்காம் - இந்தவாறடைந்தோர். முத்தி யெய்திய வியல்பி ஞேரே" என்னுஞ் சுருதியான் கேள்வி முதலாயின முத்தத் தோற்றத்திற்கு ஏதுவாதல் கூறுதலின், கேள்வியான் உடம்பு முதலியவற் றிற்கு வேருய ஆன்மா உண்டென்று உணர்ந்துழியும் ஐயம் நீங்குதல் உத்தியால் பலகாற்பயிறலாகய சிந்தஜயால் பெறற்பாலதாகலின் சிந்தஜனயைப் பிறப்பிப்ப தாகிய பதார்த்தங்களினுண்மை தெரித்தலான் சுருதியன்றிச் சாத்திரமும் முத்தி யைப் பயப்பிப்பதேயாம். [* சிவப்பிரகாசம், 83.]

சிந்தஜன செய்தபின்னர்ச் சுருதியான் உபதேசிக்கப்படும் யோகவிதியால் தெளிதல் நிகழ்ந்துழி அதன் பின்னர் உடம்பு முதலியவற்றிற்கு வேருய ஆன்மா வைப் புலப்படக்காணும். காணவே, உடம்பு முதலியவற்றை யான் என்னும் செருக் காயே மயக்கவுணர்வு கெடும். கெடவே குற்றமின்மையின், முயறலின்றும். ஆகவே. அறம் பாவங்கள் நிகழாமையின் பிறவி நீங்கும், பிறவி நீங்குழி, முன்னர்ச் செய்துகொண்ட அறம் பாவங்கள் அனுபவத்தான் நீங்கும். நீங்கவே, இறுதித் துன்பத்தின் அழிவுபாட்டை இலக்கணமாக உடைய வீடுபேறு உண்டாம்: வீடு பேற்றிற்கு ஏது ஞானமே. மயக்கவுணர்வு நீங்குதல் ஞான மாத்திரத்திரத்தால் தோன்றும், [1] "ஞானத்தால் வீடென்றே" எனத்தேற்றேகாரத்தால் ஏஜனயேதுக்கள் அதுவல்ல என விலக்குதலின்.

அற்றேல், [2] "சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கமென்று சங்கர ஜனயடையும் - நன்மார்க்கம் நான்கு" என வீடுபேற்றிற்கு நான்கும் காரணம் என்றலின், ஞானம் கருமம் என்னும் இரண்டும் கூடியே வீடுபேற்றிற்குக் காரணமா மால் எனின்:- அற்றன்ற; [3] "ஈண்டுச் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெ றியாகிய ஞானத்தைக் காட்டி யல்லது மோக்கத்தைக் கொடா" என்றும், [4] "சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" என்றும், [5] "கிரியையென மருவுமவை யாவும் ஞானங் கிடைத்தற்கு நிமித்தம்" என்றும் கரும மஜனத்தும் ஞானத்திற்கு ஏதுவாகக் கூறுதலின், கருமமஜனத்தும் ஞானம் வாயிலாக வீடுபேற்றிற்குக் காரணமாவதல்லது நேரே காரணமன்று என்பதாம். ஆகவே, பதார்த்தவுணர்வானே வீடு பேருகிய மேலாம் உறுதிப்பயன் கிடைத்தல் பெற்றும்.

---

[1], [2], [4] சித்தியார் சுபக்கம் 279, 270, 262.

[3] சிவஞானபோதம் சூத்திரம் 8. அதிகாரம் 1,

[5]. சிவப்பிரகாசம் 10.

## தருக்கசங்கிரகம்
**தருக்கசங்கிரகதீபிகை என்னும் உரையுடன்**
**முற்றிற்று.**

---

## அருஞ்சொற்பொருள்கள்

அங்குரம் - முளை
அசம்பவம் - இலக்கியம் முழுதினும் இன்மை
அசமவாயி, சமவாயி
அசித்தம் - பேறில்லது
அண்மை - சமீபம்
அதிவியாத்தி - இலக்கியம் அல்லாததன் கண்ணுமிருப்பது
அந்நுவயம் - உடம்பாடு
அந்துவய வியாத்தி
அந்துவயவெதிரேகி
அநுபலத்தி
அநுமிதி
அநுற்பூதம் - அதன் இன்மை
அநைகாந்திகம் - பிறழ்வுடையது
அப்புமுதலிய பதின்மூன்று
அபரத்துவம் - பின்மை
அபரம்
அபாவம் - இன்மை: நான்கு வகைத்து. பிராகபாவம், பிரத்யும்சாபாவம், அத்தியந்தாபாவம். அந்நியோன்னியாபாவம், ((முன்னின்மை, அழிவுபாட்டின்மை, என்று மின்மை, ஒன்றினொன்றின்மை)
அபிதேயம் - பெயரிட்டு வழங்கற்பாலது
அரிசனம் - மஞ்சள்
அவ்வியாத்தி - இலக்கியத்தின் ஏகதேசத்தின் இலக்கணம் இல்லாமை
அனுமானம் - கருதலளாவை
அனுமிதி - ஆராய்ச்சியால் தோன்றும ஞானம்

ஆகரம் - வடிவம்
ஆத்தன் - உரியோன்: .உண்மைப்பொருள் கூறுவோன்
ஆராய்ச்சி
ஆலோகம் - தீபம்

இந்தனம் - விறகு
இந்திமியமே காண்டலளவை

இரதம் - சுவை

இலிங்கபராமரிசம் - குறியாராய்ச்சி

உத்தேசம் - பெயர் மாத்திரையானே பொருளை எடுத்துரைத்தல்
உபநயம் - திருட்டாந்தத்தைச் சார்த்திக்கூறல்
உபாதானம்- சமவாமிகாரணம்
உபாதி
உவமானம்
உவமிதி
உற்பூதம் - காட்சியைப் பயப்பதொரு தருமவிசேடம் - புலப்படுதல்

ஏதுப்போலி ஐவகைத்து

ஐவகை உதுய்புக்கள்

கதம்பமுகுள நியாயம் - ஓரே காலத்தில் எல்லாப் பக்கமும் மலரும் மொட்டு
கந்தம் - நாற்றம்
கருமம் ஐவகைத்து
கருமம் - தொழில்
காரணம் - இன்றி யமையாது முன்னிற்பது

கிராணம் - நாசி

குணம் - பண்பு
குணம் இருபத்துநான்கு வகைத்து
குணில் - குறுந்தடி
குருத்துவம் - மேம்பாடு, கனம், திண்மை

கேவலவெதிரேகி
கேவலாந்நுவயி

சங்கை - எண்
சபக்கம் - துணிந்தபொருளுக்கு இடம்
சம்பந்தம் அறுவகை
சம்பந்தம் - இயைபு
சமவாயம் - ஒற்றுமைச்சம்பந்தம்
சவ்வியபிசாரம் '
சவிகற்பம் - விசேடணத்தோடு தோன்றும் ஞானம்
சற்பிரதிபக்கம் - மறுதலையுடையது
சக்ஷு - கண்
சாமானியம் - பொதுமை
சிங்நுவை - நா

சித்திரகலிங்கம் - சித்திரபடம்
சுவர்ணம் - பொன்

சேய்மை - தூரம்

சையோகம் - கூட்டம்: வியாபியாமலிருப்பது

தருமம் - நன்மை
தன்பொருட்டனுமானம்
திரவத்துவம் - நெகிழ்ச்சி
திரவியம் - பொருள்
திரவியம் ஒன்பதுவகைத்து

துவக்கு - தோல்

நிகமனம் - முடிந்ததுமுடித்தல்: உத்தி
நிமித்தம் - காரணம்
நியதம் - இன்றியமையாமை
நிருவிகற்பம் - விசேடணமின்றித்தோன்றும் ஞானம்

பக்கம் - ஐயுற்றுத் துணியும் பொருளுக்கு இடம்
பரத்துவம் - முன்மை
பரார்த்தம் - கோடி கோடி கோடியே
பரிசம் - ஊறு
பரிணமித்தல் - திரிதல்
பரிமாணம் - அளவு

பாதிதம் - மறுப்புடையது
பார்த்திவம் - பிருதிவியின்கூறு

பிரதிஞ்ஞை - மேற்கோள்
பிரதியோகி - எதிர்மறை
பீரமேயம் - அளவையால் அளக்கற்பாலது
பிரமை - உண்மை அநுபவம்
பிறர்பொருட்டனுமானம்

பீதம் - பொன்
பீலு - அணு
பீலுபாகவாதி - வைசேடிகர்

முடிந்தது முடித்தல்

வளிஉளரும் - காற்றுவீசும்
வன்னி - நெருப்பு
வாக்கியம் - தொடர்மொழி, பதங்களின் கூட்டம்
விசேடம் - சிறப்பு
விபக்கம் - துணிந்தபொருளில்லாவிடம்
விபாகம் - பிரிவு
வியாத்தி
வியாப்பியம் - அடங்குதல்
வியாபகம் - நிறைவு
விருத்தம் - மாறுகொள்வது

வீசிதரங்க நியாயம் - ஆணஊல பெண்ணஊல

வெதிரேகம் - மறை
வெதிரேக வியாத்தி

<u>அநுபந்தம்</u>

# தருக்கசங்கிரக சோதனம்

செந்தமிழ்ப் பத்திராதிபர்
**உப, வே. ஸ்ரீ திருநாராயணையங்கார் அவர்கள்**
[தொகுதி-81, பகுதி-11.]

.... .... ....

2ம்-ஆம் பத்தி உரையில், 'வேறுபடுத்தலினும்' என்று இருப்பது 'வேறுபடுதலினும்' என்று இருக்கவேண்டும். ஈண்டு முதனூலிலுள்ள வடமொழிப் பொருளும் இஃதே.

இதன் வீளக்கம் வருமாறு:

பதார்த்தங்களை அறிவுறுக்குமிடத்துத் தனித்தனி இலக்கணம் கூறவேண்டுதலால் அவ்விலக்கணங்களும் இன்னபடியிருக்குமென அறிவுறுத்தவேண்டி, 'இலக்கியத் தன்மையை வரைந்துகொள்வதனோடு நியதமாய் ஒப்ப நிற்பது' என்று அவற்றிற்கு இலக்கணம் சொல்லப்பட்டது. இவ்வாக்கியப் பொருள் அரிதின் உணர்தற்பாலது என்பதுபற்றி இதனை யொழித்து, 'பிறவற்றினின் றும் வேறுபடுப்பதே' இலக்கணமெனக்கொள்ளின இழுக்கு என்னை என்ற சங்கை உண்டாயிற்று. அதாவது:-

பிருதிவி முதலிய பொருள்களுக்கு நாற்றமுடைமை முதலியன இலக்கணமாகக்கொள்ளப்பட்டன. அவ்விலக்கணங்கள் ஒவ்வொன்றும் தத்தம் இலக்கியப்பொருள்களைப் பிறவற்றினின்றும் வேறுபடுப்பனவாய் உள்ளன. இதனை, பிருதிவீயில் உள்ள நாற்றமுடைமை அப்பிருதிவியை, மற்றைப் பொருள்களினின்றும் வேறுபடுப்பதாலும் இவ்வாறே மற்றுள்ள இலக்கணங்களும் அதன் அதன் இலக்கியத்தை பிறவற்றினின்றும் வேறுப்டுத்தலானும் அறியலாம். ஆவிற்கு அலைதாடி உடைமையும் அவ் ஆவினை எருமை முதலியவற்றினின்றும் வேறுபடுத்தலால் அதற்கு இலக்கணமாயிற்று. ஆகவே, எடுத்துக் கொண்ட இலக்கியத்தைப் பிறவற்றினின்றும் வேறுபடுப்பது யாது, அதுவே அவ்விலக்கியத்திற்கு இலக்கணம் எனக்கொள்ளின் படும் இழுக்கு என்னை? என்பது தடையுரையின் கருத்து.

இதற்கு விடை:- இலக்கியத்தைப் பிறவற்றினின்றும் வேறுப்டுப்பதே இலக்கணம் எனக் கொள்ளின, முன் காட்டிய இலக்கணங்கள் அவ்வப்பொருள்களைப் பிறவற்றினின்றும் வேறுபடுப்பதுபோல ஒவ்வொரு பொருளிலும உள்ள பிறவற்றின் வேறுபாடும், அவ்வப் பொருளைப் பிறவற்றினின்றும் வேறுபடுப்பதாய் இருத்தலால் அவ்வேறு பாட்டில் அதிவியாத்தியாம் என்பது கருத்து. அன்றியும் பதார்த்த சாமானியத்துக்கு அபிதேயத்தன்மை இலக்கணமாதலால் அதில் அவ்வியாப்தியுமாம். எங்ஙனமெனில், எல்லாப்பொருளும் பதார்த்தமாதலால் அவற்றிற்குப் பிறிதாயுள்ளபொரு

ளொன்றும் இல்லாமையால் அவற்றைப் பிறவற்றினின்றும்வேறுபடுப்பதாகாது அபி தேயத்தன்மை, அதனுனே அவ்வியாத்தியாம் என்க.

… … … … … … … … … … …

இன்னும் அப்பத்தியுரையுள்ளே, 'அதிவியாத்தி நீக்குதற்கு' என்றிருப்பது 'அதிவியாத்தியும் அவ்வியாத்தியும் நீக்குதற்கு' என்றிருக்க வேண்டும. அதாவது, பிறவற்றினின்று வேறுபடுதலின் அதிவியாத்தியும அபிதேயத்தன்மை முதலிய பதார்த்த லக்ஷணங்களில் அவ்வியாத்தியுமாம் என்றபடி. இத்தவறு முதனூலாகிய வடமொழித் தீபிகையிலும் உள்ளது.

இன்னும் அப்பத்தியுரையுள் 'குணத்தோடு ஒருங்கு நிற்பதாய்' என்றிருப்பது 'குணத்தோடொருங்கு நிற்பதாய' என்றிருக்கவேண்டும். இது, ஒருங்கு நிற்பதாய அபரமான சாதி எனப் பெயரெச்ச அடுக்காய்ச் சாதிக்கு அடையாயுள்ளது.

9-ஆம் பத்தியின் உரையில், 'அவயவ நாற்றம் புலப்படுதலின்' என்றிருப்பது: அவயவ நாற்றம் புலப்படுதலின் எனின்' என்று இருக்கவேண்டும். இங்கு எனின் என்றது 'ஆண்டு நாற்றத் தோற்றம் பொருந்தாது என்னற்க அவயவ நாற்றம் புலப்படுதளின்' என்பதை எதிருரையின்கொண்டு கூற்று என்பது குறித்து நின்றது, கொண்டு கூற்றுக் குறிப்பென்றபடி.

**இதன் விளக்கம் வருமாறு:**

'நாற்றமுடைமை பிருதிவி இலக்கணமாயின்' என்று தொடங்கி 'அழிவுபடுங் குடத்தினும் அவ்வியாத்தி வருமால்' எனின்' என்னுமளவும், ஆசிரியனை நோக்கி மாணுக்கன் வினவும் தடையுரையும் அவ்வுரைக்கு ஆசிரியன் உரைக்கும் எதிருரை யின் கொண்டுகூற்றும் விரவிய மாணுக்கன் கூற்றினைக்கொண்டு கூறிய ஆசிரியன் கூற்று. இதனுள் 'நறுநாற்றப் பொருளும் தீநாற்றப் பொருளும் ஆகிய அவயவங்க ளால் ஆக்கப்படும் திரவியத்தின் ஒன்றுக்கு ஒன்று மாறுபாட்டால் நாற்றமுண்டா காமையின் அவ்வியாத்த்க் குற்றம் தங்கும்' என்பது மாணுக்கன் கூறிய தடையுரைப் பிரதிக்கினை. இதன் மேல் 'ஆண்டு நாற்றத்தோற்றம் பொருந்தாதென்னற்க' என்றது ஆசிரியன் மாணுக்கனை நோக்கி மறுத்துரைப்பதாக மாணுக்கன் கொண்டு கூறிக் கொண்டபடி 'அவயவ நாற்றம் புலப்படுதலின்' என்றது. அக்கொண்டு கூறிய கூற்றி ற்கு ஆசிரியன் காட்டும் ஏதுவினையும் கொண்டு கூறியவாறு. இக் கொண்டு கூற்றின்மேல் இது கொண்டுகூற்று என்று அறிவுறுத்தற்குரிய 'எனின்' என்னும் ஒரு சொல் இருக்க வேண்டும். அஃது இல்லாமையால் பொருள் விளங்காது மலைவு உண்டாகின்றது.

அதன்பின 'அவ்விரண்டன் கூட்டத்தானுகிய கலப்பு நாற்றமொன்றெனக் கோடல் பொருந்தாமையின்' என்றிருப்பது 'அவ்விரண்டன் கூட்டத்தானுகிய கலப்பு நாற்றமொன்று உண்டெனக்கோடல் பொருந்தரமையின்' என்றிருக்கவேண்டும். இது

மாணவன் கூற்ருய் அவ்வியாத்திக் குற்றம் தங்கும் என்பதைக்கொண்டு முடிவதாயிற்று, 'இன்னும்' என்றது மாணுக்கன் மற்றுமோர் அவ்வியாத்திக் குற்றம் காட்டத் தொடங்கியபடி காட்டியவாறு.

11-ஆம் பத்தியுரையுள் 'ஒளிரும் வெம்மையும்' என்றிருப்பது 'ஒளிரும் வெண்மையும்' என்றிருக்கவேண்டும். 'அதன் வெம்மைப்பரிசமும்' என்று வெம்மை சொல்லப்பட்டமையால், எஞ்சிய ஒளிரும் வெண்மை புலப்படாமையே உடன் கூறத்தருவது.

37-ஆம் பத்தியுரையுள், 'குடத்தின்கட் குடசம்பந்தம் உண்மையான்' என்று இருப்பது 'குடத்தன்மையின்கட் குடசம்பந்தமுண்மையான்' என்றிருக்கவேண்டும். இங்கு விசேடண விசேடியங்களுக்குள்ள சம்பந்தம் சொல்லப்படுகிறது. விசேடணம் குடம்! விசேடியம் குடத்தன்மை. இவற்றிற்குள்ள சம்பந்தம் சமவாயசம்பத்தம். அது குடத்தைப்பற்றியும் குடத்தன்மையைப்பற்றியும் நிற்குமாதலால் குடத்தன்மையின் கட்குடசம்பந்த முள்ளதாயிற்று இங்கு சம்பந்தம் என்றது குடத்துக்கும் குடத்தன் மைக்கும் உள்ள சமவாயசம்பந்தத்தை.

44-ம் பத்தியில் 'கண்ணேடு சையுத்தமான குடத்தில் உருவம் சமவாயமாத லான்' என்றிருக்கிறது. குடத்தில் உருவம் சமவாயமன்று; சமவேதம். உருவந்துக்கும் குடத்துக்கும் உள்ள சம்பந்தம் சமவாய சம்பந்தம். அது, குடத்தின் கண்ணும் குடவுருவத்தின் கண்ணும் ஒருங்குள்ளது. ஆதலால் 'கண்ணேடு சையுத்தமான குடத்தில் உருவத்துக்குச் சமவாயமுண்மையால்' எனத் திருத்திக் கொள்ள வேண்டும்.

66-ஆம் பத்தியுரையுள் உபாதிவகையின் இரண்டாவதற்கு உதாரணம் காட்டு மிடத்து, 'வாயு காட்சிபொருள் அளவையானளக்கற்பாலதாகலின்' என்று காட்டப் படிருக்கிறது. இது முதனூலிலுன்ளபடி மொழிபெயர்க்கப் பட்டதாயினும், அவ்விரண் டாவது உபாதிக்கே உரிய சிறந்த உதாரணமாகாது. சபக்க விபக்கங்கள் இரண்டிலும் உள்ளதாய்ப் பொதுவறை காந்திகமாய் இருத்தலால் பொறுத்தமின்று என்று தோன்று கின்றது. ஆதலால், 'அளவையானளக்கற்பாலதாகலின்' என்பதை யொழித்து 'காட்சிப்பரிசத்துக்குப் பற்றுக்கோடாகலான்' என்றிருப்பிற் பொருந்தும்.

மேற்கண்ட உபாதி உதாரணவிளக்கம் வருமாறு:- வாயு காட்சிப்பொருள், காட்சிப்பரிசத்துக்குப் பற்றுக் கோடாயுள்ளதோ அது அது காட்சிப்பொருளாயுள்ளது பிருதிவி முதலியன போல்; என அனுமான வாககியம் செல்லா நிற்க, இங்கு உற்பூதவுருவம் உபாதியாயிற்று. எங்ஙனம் எனில், அவ்வுற்பூதவுருவம் பக்கதருமத் தான் வரைத்துகொள்ளப்படும் துணிபொருளில் வியாபித்து ஏதுவில் வியாபியாதிருத் தலான் எனக.

இங்கு, பக்கப்பொருள் வாயு, அதன்கண் உள்ள தருமம் புறப்பொருளாதல், அதனுல் வரைந்துகொள்ளப்படும் துணி பொருளாகிய காட்சிப்பொருள்கள் பிருதிவி,

அப்பு, தேயுக்கள். அவற்றில் வியாபித்திருப்பது உற்பூத உருவம். அது இங்கு ஏதுவாயுள்ள காட்சிப் பரிசத்துக்கு பற்றுக்கோடாந் தன்மையோடு கூடிய வாயுவில் இல்லரமையால் ஏதுவில் வியாபியாததாயிற்று. ஆகவே ஏதுவின் வியாபகமான சாத்தியத்தில் வியாபித்திருப்பதொன்று. சாத்தியத்தின் வியாப்பியமான ஏதுவிலும் வியாபித்திருக்க வேண்டியது நியாயமாயிருக்கவும், அவ்வாறு வியாபியாது இருப்பதால் அந்நியமம் தவறுதல் பற்றி அவ்வுபாதியுடைய ஏது பிறழ்ச்சியுடைய தாய் வியாத்தியுணர்வுக்குத் தடையாயிருத்தலால் ஏதுப்போலாயிற்று.

இன்னும் அவ்வுரையுள் நான்காவது உயபாதிக்கு 'முன்ன பாவம் நாசமுடைத்து அளவையான் அளக்கற்பாலதாகலின்' என்று உதாரணம் காட்டியிருப்பதும் முன் காட்டியபடியே பொதுவநைகாந்திகமாதலால், எடுத்துக்கொண்ட ஏதுப் போலிக்குச் சிறந்த உதாரணமாகமாட்டாது. இங்கு 'முன்ன பாவம் நாசமுடைத்தன்று உண்டாகற் பாலதன்றாகலின்' என்றிருக்கவேண்டும். இதன்கண் யாதானுமொரு தருமத்தால் வரைந்து கொள்ளப்பட்ட துணிபொருளில் வியாபித்து ஏதுவில் வியாபியாத பாவத்தன்மை உபாதியாயிற்று. எங்ஙனமெனில், இங்கு யாதானுமொரு தன்மை யாவது நித்தியத்தன்மை; (நித்தியத்தன்மையாவது தோற்றக்கேடுகளில்லாமை. இது ,ஆன்மா முதலியவற்றிலுள்ளது; அதனுல் வரைந்து கொள்ளப்பட்ட துணிபொருள் நாசமின்மை. (நாசமின்மை யாவது அழிவின்றி இருத்தல். இது தோற்றமுடைத் தாகிய அழிவுபாட்ட பாவத்திலுமுவ்ளது. இவை தம்முள் வேறுபாடு) அதில் யாது யாது நித்தியத்தன் மையால் வரைந்து கொள்ளப்பட்ட நாசமின்மை உடையதோ அது அது பாவத்தன்மை உடையது; பரமாணு முதலியன போல எனத் துணி பொருளா கிய நாசமின்மையில் வியாபித்து, ஏதுவாகிய உணடாகற் பாலதாந்தன்மை உடைய அழிவுபாட்ட பாவத்தில் பாவத்தன்மை வியாபியாமல் அது உபாதியாயிற்று.

97-ஆம் பத்தியுள், 'காரியத் தோற்றத்தின் பின்னுள்ளது' என்றிருப்பது 'காரியக் கேட்டின் பினனுள்ளது' என்றிருக்கவேண்டும். அல்லாக்கால் காரியமும் காரியத் தோற்றத்தின் பின்னிருக்குமாதலால் அதில் அதிவியாத்தியாகும்.

---

**குருவே சிவமெனக் கூறினன் நந்தி**
**குருவே சிவமென் பதுகுறித் தோரார்**
**குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்**
**குருவே யுரையுணர் வற்றதோர் கோவே**

- **திருமந்திரம்.**

---